ACC-NO-33785

ஓம் பரப்பிரம்மணே நம:

80-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) 

| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ ஆவணி௴ 1௳ | இதழ்-65. |
| Vol. 6. | 1931-௵ ஆகஸ்டு௴ 17௳ | No. 65. |




அறிவு இன்று அருள் என வேண்டிலேன்;
அறிவு உண்டு உனதருளால்;
இறைவா! எனதறிவின்படி இயற்றும்
மன வலியே
குறையிற் பெருங்குறையாம்; உளக்
கொள்கைப்படி எதுவும்
நிறைவெய்திட நிமிரும் செயல்
நிகழ்த்தும் வலி அருள்வாய்.

"வாஸுதேவனை வழுத்து" ஜனன மரண துக்கங்களை நிவர்த்திப்பதில் மிக்க மேன்மைபெற்ற கீதாசாரியரான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தியானம் செய்வோர் பரமபதத்தை யடைகிறார்கள். குசேலர் என்னும் ஏழைப்பிராமணர் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசித்ததால் அஷ்டைசுவரியங்களையு மடைந்தார். கோபிகாஸ்திரீகள் கிருஷ்ணனுடைய பரம கருணையால் சிறந்த பக்தைகளாகப் பரிமளித்தனர். ஒரு பெரிய மனிதனுடைய பெயரைச் சொல்லி அநேக காரியங்களை மனிதர்கள் ஸாதித்துக் கொள்ளும்போது, பகவானாகிய வாஸுதேவனை ஸ்மரித்து பெறுதற்கரிய ஐசுவரியங்களைப் பெறுவது ஆச்சரியமாகுமா? சிலகாலம் கோகுலத்தில் குழந்தையாயும், சிலகாலம் கோபாலர்களின் நேசனாயும், சிலகாலம் கோபிகா

ரமணிகளின் மனோகானாயும், சிலகாலம் அரசனாயும், சிலகாலம் ஆப்த பாந்தவனாயும், மற்றும் சிலகாலம் ஞானோபதேசம் செய்யும் கீதா சாரியனாயும் இருந்து அநந்தமான லீலைகளைச் செய்த வாசுதேவன் நம்மை ஸதா இரக்ஷித்துக் கொண்டிருக்கும்படி அவருடைய திவ்ய கமலங்களை அவர் அவதரித்த மாதமாகிய இந்த ஆவணியில் இடைவிடாது தியானிப்போமாக.

ஃ

"குழந்தையும் தெய்வமும் கொண்டாடு மிடத்தில்" குழந்தையை ஆவலுடன் தூக்கிக்கொள்வோரிடத்தில் குழந்தையும் அத்யந்த வாஞ்சையோ டிருக்கும். அவ்விதமே, பகவானை எவர் பக்தியுடன் பூஜிக்கின்றனரோ அவ்ரிடத்தில் பகவானும் பரம கருணையுடன் விளங்குவார். சில இடங்களில் இளையாள் வசப்பட்ட தந்தையும், மருகியினிடத்துத் துவேஷம் முதிர்ந்து அதைக் குமாரனிடத்துங் காட்டும் தாயும் தங்கள் புத்திரர்களை அதிக கேவலமாய் நடத்துவர். அன்பற்று நிற்பர். அவ்விதமே, புத்திரர்களும் தம் பெற்றோரது கொடுமை தாளாது கண்ணீருடன் விலகிவிடுவர். கௌரவிக்குமிடத்தில் தான் கௌரவம் உண்டு. தாம் பிறரைக் கௌரவித்தால், தம்மைப் பிறரும் கௌரவிப்பர். நாம் நமது மக்களைக் கௌரவிப்பதிலிருந்து, அந்த மக்களைப் பிறரும் கௌரவிக்கும்படியாகி, நமக்கும் அதனால் ஒரு பெருமை ஏற்படுகிறது. நமது மக்களை நாம் இகழுமிடத்து மற்றவரும் அவர்களை இகழும்படியாகி, பிறகு நம்மையும் அல்பமாய் மதிக்கத் தலைப்பட்டு விடுவர். இதுபோன்று நாமே நமது சொந்த மதக்கிரந்தங்களை இகழ்வதானது மற்றவர் முன்னிலையில் நமது மதிப்பைத் தாழ்த்தி விடுகின்றது. நமக்கு உண்டாகிற ஸந்தேகங்களைப் பெரியோர்களிடத்தில் நிவர்த்தித்துக் கொண்டு, நமது மதகிரந்தங்களிடத்தில் பக்தி விசுவாசமாயிருந்து மற்றவர் மதிப்பில் உயரக்கடவோம்.

ஃ

"நல்ல வாஸனை கெட்ட வாஸனை" ஜீவர்கள் வாஸனைகளின் ஏவுதலுக்கு உட்பட்டு, சுபாசுப காரியங்களைச் செய்கின்றனர். வாசனையானது நேராகவே சுபா சுப காரியங்களில் ஏவுகின்றதில்லை. நல்ல வாஸனையானது நல்லதையும், கெட்ட வாஸனையானது கெட்டதையும் ஸங்கற்பிக்கச் செய்யும். உதாஹரணமாக, தற்செயலாய் ஓர் அழகிய மங்கை எதிர்ப்படும்போது, இயற்கையினால் நேத்திரேந்திரியம் அம்மங்கையைப் பார்த்தாலும், சுப வாஸனையால் ஏவப்பட்டவனாயின் "பிறன் மங்கையை நோக்கக் கூடாது—அன்னிய

---

அநேக வருஷங்களுக்கு முன் பரம சத்துருக்களாக இருந்தவர்கள் இப்பொழுது ஆப்த நண்பர்களாக இருக்கிறார்கள்.

நங்கை உடன்பிறந்தாளுக்கு நிகரன்றோ?" என்றெண்ணி, வேறு விஷயத்திற் சித்தத்தைச் செலுத்துகின்றான். அசுப வாசனையால் ஏவப்பட்டவனாயின், "ஓகோ! இந்த மங்கையின் அங்கங்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன" என்று, அவளது அவயவங்களின் அழகை ஸங்கற்பிக்கின்றான். அவ்விதம் ஸங்கற்பத்திற்கு இடங்கொடுக்கவே "இவளோடு கூடி ஸுகிக்க வேண்டும்" என்று அம் மங்கையைக் காமுறுகின்றான். பிறகு அவ்விதம் கூடுவதற்குத் தக்க வழியையும் உபாயத்தையும் தனது யுக்தியால் தேடுகின்றான். பிறகு அப்படிப்பட்ட பாவச் செயலையும் செய்கின்றான். இவ்விதம் வாஸனையால் ஸங்கற்ப முதிக்கின்றது, ஸங்கற்பத்தால் காமம் உதிக்கின்றது. காமத்தினால் எதுவும் செய்யத் துணிபடைகின்றான். நிச்சயத்தினால் செய்கை நிகழ்கின்றது. இவ்விதமே உலக நடையில் இவ்விஷயம் உள்ளதாதலின், வாஸனையானது ஸங்கற்ப காம மூலமாகவே செய்கைக்கு ஹேதுவாகின்றதென்பது நிச்சயமே என்க.

ஃ

"விதிதனை விலக்கவல்ல வீரனும் ஒருவனுண்டோ?" வாஸனைகளால் உதிப்பன கெட்ட ஸங்கற்பமாயிருந்தால், "ஓ ஹோ நமக்குக் கெட்ட வாஸனை முனைந்திருக்கின்றதினாலன்றோ இத்தகைய கெட்ட காரியங்களில் ஸங்கற்ப முதிக்கின்றது என்றும், கெட்ட காரியம் இப்போது ஸுகம் போலத் தோன்றினும் பிறகு அபாரமாகிய நரக வாதனைகளுக்கும், இழிய ஜன்மங்களுக்கும் ஹேதுவாகின்றமையால் இதனில் சித்தத்தை விடக்கூடாது" என்றும் திட விவேகத்தால் உறுதி செய்துகொண்டு மனதை நிக்ரஹிக்க வேண்டும். அப்படி ஸங்கற்பத்திற்கு இடம் கொடாமல் நிக்ரஹித்துவிட்டால், அதனால் ஏற்படும் காமத்துக்கு ஹேதுவில்லாமல் போகின்றமையால் அந்த ஸங்கற்பம் அடியோடு கெட்டு அழிந்து போகும். ஆனால், பூர்வ ஜன்மவாஸனையின் காரியங்களாகிய ஸங்கற்ப காமங்களைத் தடுக்கக் கூடுமென்பதை எப்படி ஒப்புக்கொள்வது? விவேகியாயினும் தனது பூர்வஜன்ம வினைக்குத் தக்கபடியே சேஷ்டைகள் செய்கின்றான். பூர்வ வினையை மீற எவனாலும் மாளாது என்றே பெரியோர்களும் சொல்லுகின்றனர்.

ஃ

"கபட வேஷதாரிகள்" எவன் பெரிய திருடனோ அவன் துறவியைப்போல் வேஷம்பூண்டு தன் துஷ்ட காரியங்களைப் பிறர் அறியாதபடி மறைத்துவைப்பது வழக்கம். பகலெல்லாம்

---

பழகிய பழயமனிதர்களும் பழயஉறவினர் நேசர்களும் ஒவ்வொருவராய்க் கடவுளிடம் போய்க்கொண்டேயிருக்கிறார்கள். புதிய உறவும் நேசமும் மனிதர்களும் பழயதைப்போல் அத்தனை பற்றுதலாகக் காணோம். ருசிக்கவுமில்லை.

பாகவதர்களாயும், இரவெல்லாம் ஜார சிகாமணிகளாயு மிருக்கும் மாந்தர் பலருளர். மகா ஸாதுவைப்போல் பாசாங்கு செய்வோன் பரம துஷ்டனென்றே சொல்லவேண்டும். இவ்விதமே பக்தி செய்வதுபோல் நடித்து அதில் ஒரு ஸ்வப் பிரயோஜனத்தைக் கோருபவன் உண்மையான பக்தனுகான். உள்ளத்தில் அன்பு வற்றிப் போய் அதனுல் கடிதங்கள் எதுவுமே எழுதாதிருந்துவிட்டுப் பிறகு தன்னுடைய நண்பனின் ஊரின் பக்கமே போக வேண்டியதாயும் அவன் வீட்டில் தானே தங்கவேண்டியதாயும் ஏற்பட்டு விடுகிற போது, நண்பனைக் காணுகிற சமயம் தான் கடிதம் எழுதாமைக்கு —அனுவசியமாக எழுதித் தபாலாபீஸுக்குப் பணம் தரக் கூடாதென்ற அபிப்பிராயமே காரணம்—என்று சொல்வானுகில் அவன் வார்த்தையை மற்றவன் நம்புவனே? அது கபடப் பேச்சு என்பது தெரியாமற் போமோ? அந்தப் பேச்சுக்கு மதிப்பும் உண்டோ? இல்லை. அவ்விதமே, போலி பக்தனுடைய காரியங்களும் வெளிக்குத் தெரியாமலிராது. அவன் பகவத் கருணையைப் பெறுவதுமில்லை. யோக்கியமான ஒரு மனிதன் தன்சொல் தவருதிருக்கத் தன்னுயிரையே கொடுக்கவும் துணிந்து விடுவான். அவ்விதமே உண்மைப் பக்தனும் தன் பக்தியின் உறுதியை நிரூபிக்கத் தன்னையே பகவானுக்கு அர்ப்பணம் செய்து விடவும் முற்படுவான். கபட வேஷதாரிக்கு இந்த ஹிருதயத் துணிவு வராது, பிறவாது.

ஃ

"பணம் பத்து செய்யும்" பணக்காரன் பாவியாயினும் அவனைப் புண்யவானென்று ஜனங்கள் கொண்டாடுகிருர்கள். பணக்காரன் குரூபியாயினும் அவனை மன்மதனென்று வித்வான்கள் வர்ணிக்கின்றனர். பணக்காரன் நிரக்ஷரகுக்ஷியாயினும் அவனைப் பிரகஸ்பதியென்று சொல்லுகின்றனர். பணக்காரன் சுயநலமே மிகுந்து எவ்வளவு கபடஸ்தனு யிருப்பினும் அவனை வெகு உத்தமனென்றும், இரக்க சிந்தை யுள்ளவனென்றுமே உலகம் போற்றிக்கொண்டாடும். நோயுற்ற சரீரத்தை மறைக்கும் போர்வையைப்போல் ஸகல குற்றங்களையும் பணம் மறைத்து விடுகிறது. இந்தப் பணப் பைத்தியம் அதிகமா யுள்ளவர்களுக்கு உண்மை விளங்காது; புண்ய காரியங்களில் மனம் செல்லாது; தர்மம் செய்யப் புத்தி தோன்ருது; சிரேயஸ் உண்டாகாது; யதார்த்த சுகம் கிடைக்காது.

ஃ

"மனம்போல முகம்" மனத்தின் தன்மை முகத்தில் தெரிகின்றது. அன்புள்ள மனமும், அன்பு மாறிப்போன மனமும் அந்த முகத்தில் பிரதிபிம்பிக்கின்றது. சிலர் நாய் முகமும், சிலர் குரங்கு முகமும், சிலர் வியாக்ர முகமும் கொண்டிருக்கிருர்கள். இதற்

கென்ன காரணம்? சுந்தர புருஷர்களாய்ச் சிலரும், அவலக்ஷண முகத்தினராய்ப் பலரும், துர்க்குணிகளாய்ச் சிலரும், ஸத்குணி களாய்ச் சிலரும் ஜனிப்பதற்கேது வென்ன? அவரவர்களுடைய பூர்வ ஜன்ம புண்ய பாபங்களே யென்று சுலபமாய்ச் சொல்லி விட லாம். இது நிற்க, வேறொரு காரணமு முண்டு:—எப்படி ஸங்கல் பமோ அப்படியே காரியங்களும் முடிகின்றன. நல்ல எண்ணமுடை யவர்களின் ஸங்கல்பப்படி ஸகலமும் நிறைவேறுகின்றன. ஸாதிரு துக்களான பெரியோர்கள் ஒருவனை நோக்கி "தீர்க்காயுஷ் மான்பவ" என்று ஆசீர்வதிக்கிறார்கள். அப்படி ஆசீர்வதிக்கப்பட்டவன் தீர்க் காயுளோ டிருக்கிறான். பெரியோர்களின் ஸங்கல்பம் வீண்போகிற தில்லை. "மகத்" என்று சொல்லப்படுகிற மனதுக்கு எதையும் உண்டாக்கக் கூடிய சக்தி நிறைந்திருக்கிறது. மனம் வைத்துப் படித்தால் பரீக்ஷை தேறுகிறது. மனதோடு செய்யும் காரியம் சீர் பெற முடிகிறது. மனதை வேறிடத்திற் செலுத்தி வாயால் மட்டும் சிவ சிவ என்று உச்சரிப்பவன் பயனடைகிறதில்லை. எந்தக் காரி யத்துக்கும் மனம் உதவியாயிருக்க வேண்டும். இவ்வுலகத்தில் துஷ்ட காரியங்களைச் செய்யும் மனிதனைக் கண்டால் ஐயோ! இவன் புலியோ கரடியோ வென்றெண்ணிப் பீதியடைகின்றனர். அநேகர் அவனைப் புலியென்று நினைப்பதால் அடுத்த ஜன்மத்தில் அவர்களு டைய ஸங்கல்பத்திற் கேற்ப, துஷ்டனா யிருந்த மனிதன் புலி யாகவோ, அல்லது வியாக்ர குணமும் வியாக்ர முகமும் பொருந்திய மனிதனாகவோ பிறக்கிறான். இதுதான் நிச்சயமான காரணம். இப்படியே சென்ற ஜன்மத்தில் பெரியோர்களைக்கண்டு சீறி விழுந்த மனிதன் நாயாகவும், நாயின் முகத்தைப் போன்ற அவலக்ஷண வதனனாகவும் ஜனிக்கிறான். இவ்விதமே, விவேகிகள்பால் பலவித சேஷ்டைகள் புரிந்த மூடன் குரங்கு முகத்தானாய் மாதாவின் உத ரத்தில் தோன்றுகிறான். ஆகவே, நம்மைப்பற்றிப் பெரியோர்கள் நல்ல எண்ணம் கொள்ளும்படி சீலர்களாய், பகவத் பக்தர்களாய் நடந்து கொள்வது சிரேயஸ்கரம். மற்றொரு ஜன்மத்திலேனும் ஸத்குணங்களையுடைய உத்தமனாய்ப் பிறப்பதற்கு நமது நடக் கையே முதற்காரணமாம்.

ஃ

"காலைப் பிரார்த்தனை" ஸர்வ ஜீவதயாபரரான ஓ பகவானே! மீண்டும் ஓர் அருணோதயத்தைக் காண எமக்கு அனுக்கிரகம் செய் தனை. உழைப்பும்—தொல்லையும்—ஸந்தோஷமும், கவலையும் உறத் தக்க பரிசுத்த பயிற்சி யடையும்படி கொடுக்கப்பட்ட ஓர் நாள் மீண்

---

அவர் வியாதியாய் இருக்கிறாரென்றால் அவர் நடந்து கொண்ட அன் புக்கும், மோச நாச ஏமாற்றுதல்களுக்கும் தக்கபடி மற்றவர்களின் கால்கள் அவரைப் போய்ப் பார்க்க வேகமாகவோ மெதுவாகவோ செல்லும்.

டும் வந்தது. இக்காலே எமது சித்தங்களைப் புதுப்பித்தும், நினது காருண்யங்களை வருஷித்தும், எம்மைத் துயில் எழச் செய்தபடி நினது திருவாக்கை யுணர்ந்து, நினது செயலைப் பரிசோதித்து நின் திருவுளத்தை நிறைவேற்றக் கடாக்ஷிப்பாயாக. இத்திருநாளை எமக்கு அருளிச்செய்த நின் திருவருள் வாழ்வதாக. உண்மையாகவே ஐயனே! பாவத்தாலும் பழியாலும் எம்செயலாலும் பதிதரானேம். யாம் எவ்வளவு வழிதப்பிப் போனே மென்பதை யுணராமலும், சென்றுபோன நாளையாவது உற்றுப் பாராமலும், உன்னை அறியாமலும், உன்னை லக்ஷியம் செய்யாமலும் யாம் வீணே காலம் கழித்ததை மனதிற் கொள்ளுங்கால் வியாகுலம் பெருகி மனதைக் குவியச்செய்கின்றது. கர்த்தனே! உமது ஸர்வ வல்லமையால் பதிதர்களை மேனேக்கச் செய்வாயல்லவா? யாம் நினது அருள் பெற்று மேம்பாடு அடைவோமாக. இன்று எம் கண் முன்பு தோன்றிய இவ்வரிய நாளில் யாம் செய்யும் கைங்கரியம் எம்மைப் பாவத் தொழிலினின்றும் காப்பதாக. இந்நாள் முழுமையும் நின்னை யறிவதிலும், நினது ஏவலைச் சிரத்தையோடு செய்வதிலும் போக்குவோமாக. இப்புதிய நாளில் எமது கடமைகள் யாவற்றையும் வாழ்த்தியருள்வாய். எமக்கு நல்லுபதேசம் செய்வோரும் வாழிய. அன்போடு உன்னை விசுவசித்து நன்மை புரிவோரும் வாழிய. யாங்கள் அனைவரும் நினது பரிசுத்த அன்பினற் கட்டுண்டு கூடி வாழ்வோமாக. இந்நாளில் என் ஐயனே! யாம் பாரமார்த்திகத்தில் ஓர் படி உயர்வோமாக. இந்த நாள் உமது திருவுள்ளத்துக்கு இசைந்து எமக்கும் நினக்கும் பிரியமான நந்நாளாகும்படி அருள்செய்து ரக்ஷிப்பாய். ஓம் தத்ஸத்.



## சகிப்பு நிழலில் இளைப்பாறுதல்.

கஷ்டப்படவே பிறந்தோம். கஷ்டத்தையே சுகமென நினைத்துவிட்டால் பிறகு கஷ்டம் என்பதாக ஒன்று இருக்கவேமாட்டாது. லாபம் ஏதுங்காணுத—கையில் உள்ள காசுங்கூடச் செலவாகிக் கரைந்துபோவதா யிருக்கிற—கனத்த சோதனையின் இருள் நம்மைச் சூழ்ந்திருப்பதை நித்தநித்தமும் காண்கின்றேம். நமது செயலில் ஏதுமில்லை. எல்லாச் சோதனைகளையும் கடவுளின் சித்தத்திற்கே விட்டுவிட்டுச் சகிப்பு நிழலில் தங்கி இளைப்பாறக்கடவோம்.

*நல்ல காலமிருந்தால் பயமுறுத்திக்கொண்டிருக்கும் மேகங்களும் கலைந்துவிடுகின்றன.*

ஆனந்தகுணபோதினி

பிரஜோற்பத்தி௵ ஆவணி௴ 1௨

# நமது வாழ்வு நூல்.



ஆரம்பத்தில் ஒருவன் கொண்ட நல்லெண்ணங்களுடனேயே பிறகும் தனது வாழ்க்கையை நடத்திவருகின்றானா? தான் அதர்மவழியில், பாவத்தின் பாதையில் செல்வதே யில்லை யென்று சபதம் செய்து விட்டுப் பிறகு, தான் அதனின்றும் தவறிப் போனபோது அதற்காக முதலில் அவன் கண்ணீர் விட்டும் துக்கித்திருக்கலாம். பகவானே! எவ்விதமோ என்னை யறியாமலே இந்தப் பாவச்செயலை—நீசமான காரியத்தைப் புரிந்து விட்டேன்; இனி இவ்விதம் செய்வதில்லை; இந்த வேளையில் என்னை மன்னித்துக் காத்தருளும் என்று அவன் உள்ளுருகி ஓலமிட்டதும் உண்மை தான். பிறகு நடந்தது என்ன? அது முதல் அவன் திருந்தியவனாகி ஸன்மார்க்கப் பிரவர்த்தகனாகவே தனது வாழ்வு நூலை முடிக்கின்றானா? எங்கோ இரண்டொருவர் அவ்வாறு புனிதர்களாக இருக்கலாம். பெரும்பான்மையான செய்தி யாதெனில், ஒரு பாவகாரியத்தைச் செய்வதற்குத் தைரியப்பட்டுத் தேறிவிட்ட நெஞ்சம் அதற்கு அடுத்த முறை அந்தப் பிழையைச்செய்வதற்கு அவ்வளவாகப் பின்னடையாமல் துணிந்தே விடுகிறது. பிறகு, அது அவனுக்கு ஒரு சாதாரணச் செயலாகவும் ஆகி விடுகிறது. ஒரு பெண்ணைக் கற்பழித்தவனோ, ஒரு பொய்யைத் துணிந்து கூறியவனோ, ஒரு நம்பிக்கைத் துரோகத்தைச் செய்தவனோ முதலில் அந்தச் செய்கைக்கு வருந்தியிருப்பினும், அடுத்த முறையில் அவன் வருந்துவதின்றித் தேறி விடுகின்றான். பிறகு அதிலுள்ள தோஷமும் குற்றமும் அவ்வளவாக மனதிற் சென்று தாக்குவது மில்லை; அவன் மீட்சி பெறுவது மில்லை. இவ்வாறாக, அறியாமையாலும், அகம்பாவத்தாலும், அலக்ஷிய புத்தியாலும் மாந்தரிடையே விளையும் தவறுகள் எத்தனை எத்தனையோ!

ஃ

பெரிய பாவச் செயல்கள் ஒருபுற மிருக்க, முதலில் அற்பமாகத் தோன்றிப் பின் ஸர்வநாசத்தை விளைத்து விடும் எத்தனையோ பிழைகளை நம்முடன் கொண்டு நிற்கிறோம். அவைகள் பிழைகள்

என்று ஒவ்வோர் சமயங்களில் நமக்குத் தோற்றிய போதிலுங் கூட, அவைகளை நாம் விட்டொழிக்க முயற்சி எடுத்துக் கொள்வதில்லை. ஒருவன் தன்னுடைய வாழ்வுநூலில் ஏற்கெனவே வாசித்துத் தள்ளி விட்ட பக்கங்களை எவ்வளவு தப்புந்தவறுதலுமாகப் படித்துச் சென்றிருக்கின்றானென்பதை யோசித்துப் பார்க்கட்டும். இனி படிக்கத் தொடங்கும் வாழ்வு நூலின் பக்கங்களையேனும் ஒழுங்கும் திருத்தமுமாகத் தவறுபாடின்றி ஓதியுணர்ந்து நலம்பெற அவன் சிரத்தை கொள்வானாயின், அதுமுதற் கொண்டேனும் அவன் நல் வழிபட்டு நலமடைதல் கூடும். மனிதனிடம் காணும் ஒரு முக்கிய செய்கை யாதெனில், அவன் மனம் வைத்தால் தன்னைத் திருத்திக் கொள்ளக் கூடிய சக்தியைப் பெற்றிருப்பதேயாகும். நாய்க்கு மலம் தின்பதே நினைவு. அதிலிருந்தும் அது திருந்தப் போவதில்லை. ஆனால், மனிதனோ தனது பகுத்தறிவின் காரணமாக தனது பிழைகளைத் தெரிந்து திருந்தி க்ஷேமப்படுதல் கூடும்.

ஃ

மனிதனுக்கும் மற்ற மிருக ஜாதிகளுக்கும் உள்ள முக்கியமான வித்தியாஸங்களிலொன்று என்னவென்றால், மனிதனுக்கு ஞான பாவம் உண்டு; மிருகங்களுக்கு அது கிடையாது. எவ்வளவு இழிந்த காட்டு மனிதனானாலும் ஒரு வேளை இல்லாவிட்டால் மற்றொரு வேளை தெய்வம் ஒன்றிருக்கிறதென்று தோன்றித்திருந்தக்கூடும். மிருகங்களுக்கு அப்படிப்பட்ட எண்ணம் எப்போதாவாது உண்டாகிறதென்று நம்புவதற்கு இடமில்லை. ஒரு நாய் தன்னுடைய எஜமானன் இறந்த பிறகும் அவனை விட்டுப்பிரியாமல் அவனைப் போர்த்திருந்த துணியின் கீழ்ப் பதுங்கிக் கொண்டிருந்ததாம்; அது தனக்கு அவன் முன் செய்த நன்மைகளுக் கெல்லாம் அவனுக்கு நன்றி பாராட்டிற்று என்பதற்கு இது போதுமான திருஷ்டாந்தமாகிறது. இந்த விஷயத்தில் நாகரீகமுள்ள மனிதர்களுக்குள் அநேகர் இந்த நாய்க்குப் பின்னிற்பார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆயினும், மிருகங்களுக்கெல்லாம் புத்தியில் சிறந்ததென்று சொல்லப் படுகிற நாய்க்கும் தான் முன்னாலே அடைந்த உபகாரத்தை நினைத்துத் தன்னுடைய கடமையைத் தீர்க்க வேண்டு மென்கிற எண்ணம் ஒன்றே தவிர, வேறோர் எண்ணம் தோன்றுமென்று எண்ணுவதற்கு நியாயமில்லை. ஆகையால், ஞானபாவமும் தன்னைத் திருத்திக் கொள்ளும் அறிவும் மனிதனுக்கே உரியதென்று சொல்லலாம். இந்த ஞானபாவத்தின் மூலாதார நீதிகளாய் ஸத்தியம், தர்மம் முத

வீட்டுக்கு வந்தவரின் குழந்தை திடீரென்று இறந்தும், வீட்டுக்காரியின் தமக்கை மரணமடைந்த செய்தி எட்டிப் பிரலாபித்தும் ஏங்கி நிற்கையில், இன்னொருவர் தம் குழந்தைக்குக் காது குத்தப் போவதாய் சந்தோஷத்துடன் எழுதிய கார்டு வருகிறது. இதுவும் ஒரு வேடிக்கையே.

லியன விளங்குகின்றன. இவைகள் தவிர, மனிதனுக்கே உரிய இன்னொரு வகை நீதிகளும் உண்டு. இவைகள் அந்தந்த ஜாதியாருடைய குணகுண விசேஷங்களினால் தோன்றி வெவ்வேறு வகைப்பட்டிருக்கின்றன. இவற்றை நீதிகளென்று சொல்லப்படாமல், வழக்கங்களென்றும், நடத்தைகளென்றும் ஒழுங்குகளென்றும் பலவிதமாகக் கூறப்படுகின்றன. இவைகளே நமது வாழ்வு நூலைச் சுற்றிக்கொண்டு நிற்பதில், இவற்றோடு பழகும் நாம் செய்யும் தவறுகளும், நமது நடத்தைப் பிசகுகளும் எந்த ஸ்திதியிலிருக்கின்றனவென்று சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

ஃ

துரைத்தன வரிகள் கடுமையானவைகளென்கிற சொல் எங்குமுண்டு அவற்றைவிட நம்முடைய அஜாக்கிரதையாலும் பிசகாலும் உண்டாகும் வேறு பாரமான வரிகளுமுண்டு. எப்படியெனில், சோம்பலுக்காகத் துரைத்தன வரியைப் போல் இரட்டிப்பும், வீண் பெருமைக்காக மும்மடங்கும், அறிவீனத்திற்காக நாலு பங்கும் நாம் செலுத்த வேண்டியிருக்கிறது.

ஃ

ஒரு ராஜ்ஜியத்தில் குடிகளெல்லோரும் பிரதிதினமும் தங்கள் காலத்தில் பத்திலொரு பங்கை ராஜகாரியத்தில் செலுத்த வேண்டும் என்கிற ஓர் நிர்ப்பந்தம் இருந்தால், அவ்வரசனைக் கொடுங்கோலனென்று சொல்வோமல்லவா? அப்படியிருக்க, சோம்பல் என்ற அதிபதிக்கு நமது நேரத்தில் நாள்தோறும் எத்தனை பங்கை வரியாகக் கொடுத்து வருகிறோம்? சோம்புந்தன்மை வியாதியை யுண்டாக்கி வாழ்நாளைக் குறைக்கின்றது. "துலக்காத ஆயுதம் துருப்பிடிக்கும், கையாடுகிற இரும்பு பளபளக்கும்" என்றபடி உழைப்பவன் வியாதி முதலியன இன்றிச் சுகித்து வாழ்வான். அன்றியும், எவனுக்கு உயிர்மேல் ஆசை இருக்கிறதோ அவன் காலத்தை வீணாக்கலாகாது. ஏனெனில், எப்படி பானை மண்ணினாலும், ஆபரணம் பொன்னினாலும், தேகம் பிரிதிவி முதலிய பஞ்ச பூதங்களாலும் செய்யப் பட்டிருக்கின்றனவோ, அப்படியே நமது வாழ்நாள் நேரத்தின் அணுத்திரளினால் உண்டாக்கப்பட் டிருக்கிறது. இதையுணராமல், "உறங்கு நரிக்கு உணவு கிட்டாது" என்பதை மறந்து, எவ்வளவு நேரத்தை அனுவசிகமாய்த் தூங்கித் தொலைக்கிறோம்.

ஃ

மற்றெல்லாப் பொருளிலும் காலம் அதிக விலையுள்ளதென்றால், அதை வீண் போக்குகிறவனையும் ஊதாரி என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால், "போன பொழுது மீண்டும் வராது." நாம்

போதும் போதும் என்கிற நேரமெல்லாம் செய்யப் புகில் போதாத தாய் விடுகிறது. காலத்தை வீணுக்கும் சோம்பனுக்கு எல்லாம் கஷ்டமாகவே படும். ஆனால், காலத்தை வீண்படுத்தாது உழைப்பவனுக்கோ யாவும் எளிதில் கைகூடும். தூக்கத்தினின்று நேரஞ்சென்று எழுந்திருப்பவன் அன்றெல்லாம் இரவும் பகலும் ஓடிஓடிச் செய்தாலும் அவன் வேலை முடியாதிருப்பதுமன்றி, தரித்திரமும் வேகமாய்ப் பின் தொடர்ந்து அவனைப் பற்றும். வேலையை நீ அடிமை கோள்; அது உன்னை அடிமைகொள்ளாதிருக்கட்டும். மேலும் "வெள்ளெனப்படுத்து விடியுமுன் எழுதல், தேள்ளு ஞானமும் தேக சுகமும் உள்ள நற் போருளும் உலகத் தளிக்கும்." கஷ்டப்படுகிறவனுக்கு என்றைக்கும் குறைவில்லை. அதைவிட்டு வீணேகாலத்தைப் போக்கி அதிர்ஷ்டம் வருமென்று எதிர்நோக்கி நிற்பவனுக்குப் பட்டினியே கதி. வருத்தமின்றி வரவில்லை. மேலும் மேலும் முயன்றாலல்லாமல்பொருள் வரும் வழியை எட்டிப்பிடிக்கமுடியாது. பிரயாசைப் பட்டால் பசித்திரோம். பசியென்பது வேலை செய்பவனின் வீட்டை ஒரு வேளை எட்டிப் பார்த்தாலும் உட் செல்லப் பயப்படும். அன்றியும், தண்டல்காரனெவனும் காலத்தைச் சரியாய் உபயோகப் படுத்துகிறவனின் வீட்டை அணுகான். ஏனெனில் காலத்தை நன்கு பயன் படுத்திக் கஷ்டப் படுவோன் கடன் படான். தூக்கமுள்ளவனுக்கே கடன் அதிகப்படும். திரண்ட ஆஸ்தியை ஒருவன் பெறுவிடினும், புதையல் கிடைக்காவிடினும் தான் என்ன! முயற்சி நற்பாக்கியத்துக்குத் தாய். உழைப்பவனுக்குக் கடவுள் சகல நன்மைகளும் அளிப்பார். சோம்பேரிகள் தூங்கித் தங்களின் காலங்களைப் போக்கும் போது, நீ நிலத்தை உழுது பண்படுத்தினால் உண்டுடுத்து லாபமடையலாம். காலம் அவ்வளவும் தங்கம்.

ஃ

எதையும் நாளை யென்பதைவிட இன்று செய்வதே நன்று. நாளை என்ன தடங்கலுண்டாகுமோ? நாளைச் சாப்பிடுகிற பலாக்காயைவிட இன்று சாப்பிடுங் களாக்காயே மேல். இன்று செய்யும் ஓர் வேலை நாளை செய்யும் இரண்டு வேலைக்குச் சமம். எனவே, இன்றையவேலையை நாளைவரையிலும் நிறுத்தி வையாதே. கையுறை நீக்கி ஆயுதத்தைக் கையாடு. கையுறையிட்ட பூனை எலி பிடிக்குமா? நீ தனியே செய்து முடிக்க சாத்தியப்படாத அதிக வேலையாயினும் "மெல்லப் பாயுந் தண்ணீர் கல்லையும் குழியப்பாயும்"—"சிறுகச் சிறுகத் தின்னால் மலையையும் தின்னலாம்" என்ற பழமொழிகளின் படி, கொஞ்சம் கொஞ்சமானாலும் நீ இடையறாது செய்யில் பெரும் பயனடையலாம்.

ஃ

காலம் தப்பாமை முக்கியம். இது இவ்வுலகில் உள்ளளவும் நம்முடைய காரியங்களின் சித்திக்கும், பிறருடைய சௌக்கியத்

திற்கும் மிகவும் அவசியமானது. நம்மவர் இதைக் கவனிப்பதே யில்லை. அவ்வளவு கண்டிப்பாயிருப்பது பிசகென்றும், சிநேகத்துக் குக் குறைவென்றும் எண்ணுகிறோம். எந்த விஷயத்திலும் கால ஏற்பாட்டின்படி நடக்கத் திறமையற்றவன் அந்தத் திறமையின் மையினால் அயலாருக்கு வீண் சிரமம் கொடுக்கிறான். காலம் தவறு வதாகிய குற்றத்துடன் காலத்தின் சிறப்பையும் அறியாது போகி றோம். ஒரு வேலைக்காக ஏற்படுத்தியிருக்கிற காலத்தின் முடிவில் அந்த வேலையைச் செய்யத் தொடங்குவது பெருங் குற்றம். தொழில் வேலைப்பாடு எவ்வளவு சிறப்பாயிருந்தாலும், காலதாமசத் தைப்பற்றி ஒரு தரம் ஒரு தொழிலாளியிடத்தில் போனவன் மறு படியும் அவனிடத்திற்குப் போகப் பின்னடைந்து பயப்படுகிறான். காலதாமசத்தினால் பிறருக்கு உபத்திரவம் உண்டாக்குவதுடன், அவநம்பிக்கைக்குப் பாத்திரராயுமாகிறார்கள். நாளைக்கு ஆகட்டும், நாளைக்கு ஆகட்டுமென்று சும்மா இழுத்தடிக்கிறவனிடத்தில் அவ நம்பிக்கை பிறப்பது அதிசயமோ! தான் குறித்த தவணையின்படி ஒன்றை நடத்திக் கொடுத்து முடிக்காதவன் எவ்வளவு பெரிய ஸ்தா னத்திலிருப்பினும் மதிப்பு குன்றி விடுவான். எந்தக் காரியத்தையும் காலம் தவறாமல் செம்மையாய்ச் செய்ய ஒழுங்கு இன்றியமையா தது. கணித சாஸ்திர ரீதியாக ஒரு ஒழுங்குடனே அடுக்கிவைக் கப்பட்டிருப்பவைகளில், ஒவ்வொருபக்கத்திலும் எத்தனை இருக்கிற தென்று தெரிந்தால் மொத்தம் எத்தனையென்று சொல்லிவிடலாம். ஒன்று குறைவாயிருந்தாலும் சட்டென்று பார்க்கும்போதே தெரி யும். அப்படியின்றிக் கண்டது கண்டபடி ஒழுங்கற்று இறைத்தி ருந்தால்—எத்தனை போயிற்று, எத்தனை வந்தது என்று கூட அறி வது பிரயாசை. இவ்விதமே, ஒழுங்கு பெரிய காரியங்களிலும் உப யோகமாயிருக்கும். ஒழுங்கின் பயனை நம்மவரிற் பலர் அறியாமை அவர்களது பெருந் தவறுகளில் ஒன்று.

ஃ

சுத்தமாயிருப்பதிலும் நம்வரின் தவறுகள் எவ்வளவோ! வீட்டுக்குள் நுழைந்தால் ஓரிடத்தில் சாணிக்குவியல்களும், ஓரிடத் தில் அசுத்தமான அற்ப வஸ்துக்களும், ஓரிடத்தில் பூச்சிகள் பிடுங் கும் படுக்கையும், அசுத்தத் துணிகளும், இவைகளின் நடுவில் சுத்த மான பதார்த்தங்களும் காணப்படும். நம்மிடத்தில் உள்ள குற்றம் யாதெனில், அசுத்தமாயிருக்கிறோ மென்பதல்ல; சுத்தத்தினால் உண்டாகும் நன்மைகளை அறிந்தும் அலக்ஷியமாயிருந்துவிடுகிற தவ

---

யாத்திரையாய்ப் போன இடத்தில் அவர்கள் ஒரு அநாதை போன்றவர் களே. அங்கு அவர்களுக்குள் மரணம் நேருவதும், அல்லது மக்களைப் பறி கொடுப்பதும், மற்றவர் வீட்டு இரவல் திண்ணையில் தனியே குந்திக் கண்ணீர் விடுவதும் என்ன காலம்!

றுதலைச் செய்கிறேமென்பதே. ஒரு ஐரோப்பியர் வெகு நாள் விலகி யிருந்து தன் சிநேகிதனுடைய குழந்தையைப் பார்த்தால்,—பையன் அழகாயிருக்கிறான், பையன் நல்ல வளர்த்தி,—என்பார். நம்மவரோ அப்படிபட்ட தருணத்தில்,—என்ன பையன் இப்படி இளைத்துப் போயிருக்கிறானே, உடம்பு செம்மையில்லையா,—என்பர். இவ்விருவரும் குழந்தையினுடைய க்ஷேமத்தைக் கருதுபவர்கள்தான்; ஆனால்,வித்தியாஸம்என்னவெனில், ஐரோப்பியருடைய கொள்கை நன்மையைக் கோருதல்; நம்மவருடைய கொள்கை தீமையை விலக்கல். இதனால்தான் அவர்களுடைய பேச்சும் நடத்தையும் பேதப் படுகிறது. இவை தவறுகளல்லவாயினும் வழக்கத்தோடு சேர்ந்து வருபவை. ஃ

என்ன நாம் சும்மா உழைக்கிறது தானு? கொஞ்சமும் அவகாசம் வேண்டியதில்லையா என்று நினைக்கிறேம். அவகாசம் என்பது யாதெனில், ஏதேனும் ஒரு நற்காரியத்தைச் செய்வதற்கு ஏற்ற நேரம் கிடைப்பதே. அது சுறுசுறுப்புள்ளவனுக்கே வாய்க்கும். முயற்சியுடன் நூற்கிறவன் பெரிய வஸ்திரத்தைப் பெறுவான். நாம் உழைப்பது மாத்திரம் போதாது; நிலையாயும் ஸ்திரமாயும் ஜாக்கிரதையாயும் நடந்து கொள்வதுடன், நமது காரியத்தை வேறொருவரை நம்பி விடாமல் நேரில் செய்ய முயல வேண்டும். நீ இருந்த இடத்திலேயே யிருந்து உன் கடையைப் பாதுகாத்து வந்தால் அது உன்னைப் பாதுகாக்கும். மேலும், உனக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருந்தால் நீயே போகவேண்டும். தான் போகிற காரியத்துக்கு ஒரு ஆள் போனால் சொட்டு. உடையவன் கண்ணோடாப்பயிர் அழியாதா என்பது பழமொழி. அறிவீனத்தால் உண்டாகும் நஷ்டத்தைக் காட்டிலும் அஜாக்கிரதையால் விளையும் கேடு அதிகம். வேலைக்காரனைக் கண்காணியாமல் இருப்பது நமது பணப்பையை அவிழ்த்து வைத்துக் கொள்வது போலாம். கண்டவர்களை நம்புகிறவன் மோசம் போகிறது உண்டேயன்றி, எல்லாரையும் நம்பச் சந்தேகப்படுகிறவன் அவ்வளவாகச் சேதப்படமாட்டான். எவன் தன் காரியத்தைக் குறித்துச் சொந்தத்தில் ஜாக்கிரதைப் படுகிறனே அவனுக்கே லாபம். உன் மனதிற்கேற்ற உண்மையான வேலைக்காரன் உன்னைத் தவிர வேறொருவரும் கிடையாது. அற்ப அஜாக்கிரதையால் அளவற்ற கேடு விளையும். ஒரு சிறு ஆணி அற்றதனால் ஒரு லாடம் விழுந்து போக, அந்த லாடம் இன்மையால் குதிரை காலிடறி விழ, இப்படிக் குதிரை காலொடிந்து விரைவாய் ஓடசக்தியற்றதனால், அதன் மேலிருந்த வீரன் ஓடித் தப்பிக்கொள்ள வழி

கலகத்திற்குத் தயார் செய்வதினாலேயே பல சந்தர்ப்பங்களில் கலகமே நேர்ந்து விடுவதுண்டு. எனவே, கலகமே பிறக்கும் என்று சொல்லிக் கொண்டேயிருப்பதைவிட சமாதானம் தோன்றும் வழிகளை நாடுவது நலம்.

யின்றிச் சத்துருக்கள் கையில் அகப்பட்டுக்கொள்ள—ஹா! சிறு பிழை பெருந்துயராதல் கண்டீரா?

ஃ

எவ்வளவு பிரயாசையும் ஜாக்கிரதையுமிருப்பினும் சிக்கனமாக இருந்தாலொழிய அவை பயன்படா. சம்பாதிப்பவன் சேர்க்க வகையறியாமற் போனால், வரவுக்கும் செலவுக்கும் சரியாகி, ஒரு காசுக்கும் வழியின்றிச் சாவான். கொழுத்த சாப்பாட்டுக்காரன் ஜாகையில் குடிக்கச் சொம்பும் வைத்திரவான். ஆகவே, செல்வனுயிருக்க நீ விரும்புவாயானால், ஈட்டுவதைப்போல் கூட்டுவதையும் கவனி. "குடி—கூத்தி—வஞ்சக—கொடுஞ்சூது—இந்நான்கும் மிடிதரச் செல்வங்கெடும்." ஒரு துர் அப்பியாசத்துக்காகச் செலவாகும் பொருள் இரண்டு குழந்தைகளைக் காப்பாற்றும்.

ஃ

கொஞ்சம் தேநீர்—காபி பருகுவதாலும், காலாகாலத்தில் கொஞ்சம் சாராயம் குடிப்பதாலும், சற்றே விலையுயர்ந்த துணியை யுடுப்பதாலும், விருந்தில் கொஞ்சம் அதிக செலவிடுவதாலும், என்னபிரமாதம் விளைந்து விடுமென்று நினைக்கலாம். ஒரு காசு பேணில் இரு காசு தேறும் என்றபடி சிறு செலவுகளை ஜாக்கிரதையாய்க் கணக்கிட்டால் பெரிய தொகை எளிதில் மிகுத்து வைக்கலாம். மூடர்கள் பணச் செலவிட்டு விருந்து செய்ய, தந்திரசாலிகளான புத்திமான்கள் ஒரு காசும் கைகடிக்காமல் நன்றாகப் புசித்துவிட்டுச் செல்கிறார்கள்.

ஃ

ஒரு பொருள் மலிவாகக் கிடைத்தாலும் அவசியமில்லாத பொருளை அதிக விலையுள்ளதென்றே நீ விலகிவிடப் பார். அந்தப் பொருள் இல்லாமல் இன்னும் சில நாட்களைப் போக்க முடியாதா என்று முயன்று பார். அநாவசியகமான பொருளை வாங்கப் புகுந்தால் அவசியமான பொருளுக்கு அவதிப்படுவாய். ஒரு காசு தானே என்று அலக்ஷியம் பண்ணாமல் காசு பொறுமானதை வாங்கும்போதும் நன்றாய் யோசித்துப் பார். ஒரு காசு சமயத்திற்கில்லாது திண்டாடியவர்கள் எத்தனையோ பேர்! மலிவானதாகக் காணப்படினும், அது உன் பணத்தை அவசியமான பொருள்களை வாங்குவதற்கு உதவப்பண்ணாமல் கெடுதியை விளைவிக்கிறது. வாங்கி விட்டோமேயென்று பிற்பாடு மனஸ்தாபப் படும்படியான பொருளை வாங்குவது புத்தியீனம். எலும் கூறும் இடத்திற்குப் போய்க் கண்டதை வாங்குவது தீது. அநேகர் அழகழகென்று விலையுயர்ந்த வஸ்திரங்களை வாங்கிவிட்டு, உண்ணச் சோறின்றி தங்களையும் தங்களை நம்பியிருக்கிற குழந்தை குட்டிகளையும் பட்டினிபோடுகிறார்

கள். உயர்ந்த உடுப்பு அயர்ந்த அடுப்பு. தன்னைப் பணிந்தாரைத் தான் பணிய நேர்வது பல வீண் செலவுகளின் விபரீதத்தாலேதான். நின்று தின்றால் குன்றம் மாளும்.

ஃ

நமக்கு அகண்ட ஐசுவரிய மிருக்கிறது; கொஞ்சம் செலவழிந்தால் என்ன குறையப் போகிறதென்று எண்ணமிடுவோர் பலர். நீரின் அருமை கிணற்று வடிவில் தெரிவது போல, பணத்தருமை கடன் கேட்கையில் தெரியும். நம்முடன் கூடித்தின்று நாம் ஒருகாசு சேர்க்க விடாமல் நமது வருமானத்தை அழித்தோரே, நமக்கு இப்போது விரோதிகளாய் இருக்கிறார்கள். நாம் கடன் ஜெயிலுக்குப் போகையில் அவர்கள் சந்தோஷமாய்க் கை கொட்டிச் சிரித்து நம்மைப் பரிகாசம் பண்ணுகிறார்கள்! பெருமைக்காரர் காலையில் சம்பிரமமாய் உண்டபோதிலும், பகல்போஜனத்திற்குள் தரித்திரதிசையடைந்து, இராப் போஜனத்தில் சீ, சீ என்று கடன்காரர் முதலியவர்களால் நிந்திக்கப்படுவார்கள். ஒரு விநோதப்பொருளை வாங்க, அதற்கேற்ற டம்பமான தோற்ற முண்டாகும்படி வேறு ஒன்பது பொருளை வாங்க வேண்டி வருகிறது கடன் பட்டோருக்குத் தீரமும் சன்மார்க்கமும் ஏது? கடன் தந்தவனை ஏமாற்றப் பார்க்கவே புத்தி போகும். ஓடுகிற ஆறு எப்போதும்மே ஓடிக்கொண்டே யிராது.

ஃ

உன் பலம் ஒடுங்குகிற விருத்தாப்பிய காலத்துக்கு வேண்டியதை உன்னால் கூடுமான பொழுதே சேர்த்து வைத்துக்கொள். வைத்திய பரிசோதனையின் பேரில் சேர்த்துக் கொள்கிற லைப் இன்சூரன்ஸ் கம்பெனியில் நீ அவசியம் சேர்ந்துகொள்ளப் பார். வைத்திய பரிசோதனையற்ற இன்சூர் கம்பெனிகளில் சேராதே. அது ஒரு பெரிய மோசம்; அவை நீடித்து நடைபெறாது. பிரதி மாதமும் ஏழரை ரூபாய் கொடுத்துத் தபாலாபீஸ் ரொக்க சர்டிபிகேட்டுகளை வாங்கிச் சேர்த்துக் கொண்டே போ. மேலும், வருமானம் நீடித்ததும் நிச்சயமானதுமல்ல. செலவுகளோ வாழ்நாள் உள்ளளவும் நிலைமையும் நிச்சயமுமானது. ஆகவே, இரண்டு அடுப்பு போடுவது எளிது; அவற்றில் ஒன்றையேனும் விடாது எரித்தல் அரிது என்பதை நினைத்து வீண்செலவுகளின் பொருட்டுக் கடன் படாமல் "கடனில்லாச் சோறு கால் வயிறு போதும்" என்று கௌரவமாய் ஜீவனம் பண்ணக்கடவை. உன்னால் கூடியதைச் சம்பாதி; சம்பாதித்ததை வீண்செலவின்றிக் காப்பாற்று. சொக்காய்க்குக் கொஞ்சம் துணிவாங்க நினைக்கும்போது, பழய சொக்காயையே இன்னும் சில நாளைக்குத் தரித்துக்கொள்ள முடியாதா என்று எண்ணிப் பார். அப்போது நீ அதிக லாபம் அடைவாய்.

ஃ

பிரயாசை, சிக்கனம், முன்ஜாக்கிரதை முதலிய நற்குணங்கள் நமக்குத் தேவை. கடவுளுடைய அனுக்கிரக மின்றி ஒன்றும் ஈடேருதாகையால் அவரது கிருபையும் தேவை. சர்வ ஜீவ தயாபரராகிய பகவானுடைய அருளுக்குப் பாத்திரராவதற்கு சதா அவரை நமது உள்ளத்தினின்று நீங்காமல் பிரார்த்திக்கவேண்டும். அவர் சித்தம் மகிழுமாறு நம்மைச் சூழ்ந்திருக்கும் ஏழைகளுக்கு அன்பு பாராட்டி நம்மால் ஆன அளவு நன்மை புரியவும் பார்க்கவேண்டும். இத்துடன் நமது ரகசிய பாவங்களுக்கும் நெஞ்சு துடித்துக் கடவுளை மன்னிக்கும்படி கண்ணீர் விட்டுக் கெஞ்சவேண்டும். நிர்மலமான உள்ளத்தினரை ஏமாற்றி மோசம் செய்தார் தாங்கள் பிரியம் வைத்தவர்களையும் இழந்து, தங்கள் சந்ததியாரையும் தம் கண் முன்பே இறக்கக் கொடுத்து அனாதைகளாய்த் திகைத்த சம்பவங்கள் எத்தனையோ ஆயிரம் உண்டு. அவர்கள் எவரைக் கெடுக்கப் பார்த்தனரோ அவர்களே பிற்காலத்தில் நல்வாழ்விலிருக்கும்படி இறைவன் செய்துவிட, அதனை நோக்கி வயிறு எரிந்து ஆவி துடித்தவர்களும் எண்ணற்றவரே! நமது வாழ்க்கையில் நாம் புரியும் தவறுகள் கொஞ்சமா? சண்டாளத்தனங்கள் கொஞ்சமா? ஏமாற்றுதலும் மோசங்களும், வஞ்சனை சூதுகளும் கொஞ்சமா? பிறரது வயிற்றிலடித்து ஏங்கவைத்தது கொஞ்சமா? கூலியைக் குறைத்துக் கொடுமை செய்தது கொஞ்சமா? குடும்பத்தைப் பிரித்துக் கலக்கிச் செய்த கோரணிகள் கொஞ்சமா? நம்மை நம்பிய நம்பிக்கைக்கு எதிரிடையாக நடந்து நட்டாற்றில் கைவிட்டது கொஞ்சமா? பிறன் பொருளை யுண்டு ஏப்பமிட்டுவிட்டு ஏங்கச் செய்தது கொஞ்சமா? இங்ஙனமாக நாம் மனதறியத் தவறுகளையும் பிழைகளையும் புரிந்துவிட்டுக் கடவுளுக்கு ஒரு "கும்பிடு" போடுவதென்ருல் அது கடவுளையே வஞ்சிப்பதாகுமல்லவோ? அவரை ஏமாற்றுவ தாகுமல்லவோ? எல்லாமுணர்ந்த அவர் முன்னிலையில் நம்மை யோக்கியர்போல் காட்டுவதாகுமல்லவோ? நமது மனம் பரிசுத்த மடையாதவரை கடவுளின் அருளுக்கு வெகு தூரத்திலேயே நின்றுக் கதறும்படிதான் வரும். நமக்கே செய்துகொண்ட பாவத்தவறுகளையும், நாம் பிறருக்கு இழைத்த தீமைகளையும் வாய்விட்டுச் சொல்லி வருந்தி நம்மனத்தைத் தூய்மையுள்ளதாக்கிக் கொள்ள எவ்வளவுக்கு முயல்கிருேமோ அவ்வளவுக்கு நாம் நல்வாழ்வு காண்பவர்களாவோம். நன்மைக்கு நன்மையே துணை. நாம் வாழ்வதும் வீழ்வதும் நமது பரிசுத்த ஹிருதயத்தைப் பொறுத்ததாகும். சென்றன செல்க. இன்று முதலேனும் நாம் நல்வழிசெல்ல நமதுவாழ்வுநூலைத் திருத்திப்படித்து உய்யக்கடவோம்.

---

பொதுவாகவே ஒருவர் பிரசங்கம் செய்த போதிலும், அதிலும் சிலருக்குச் சவுக்கடி கிடைக்கக்கூடிய விஷயங்கள் தாமே வந்து புகுந்துகொள்கின்றன. அது பிரஸங்கியின் குற்றமன்று.

# எனது காதலின் ஏமாற்றம்.

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)



ஓய்வு நேரங்களில் நான் அவளோடு இன்பமாக சம்பாஷித்துக் கொண்டிருப்பது வழக்கம். அது என் கௌரவத்துக்கு அழகல்லவென்று என் நண்பர்கள் பலர் பிரசங்கமாரி பொழிந்தனர். ஆனால், பூர்ண சந்திரனைப்போல் பொலிவுற்று விளங்கிய அவள் முகம் அவர்களின் தத்துவோபதேசத்துக்கு என்னை அடிமையாக வொட்டாமல் தடுத்தது. திருவனந்தபுரம் வந்த பின் சாரதையைப் பார்க்க எனக்குத் தருணம் வாய்க்கவில்லையாயினும், அவளிட மிருந்து வந்து கொண்டிருந்த கடிதங்கள் எனக்கு சற்று ஆறுதலளித்தது. என்றாலும், அவள் முகத்தைக் காணாத ஒவ்வொரு நிமிடமும் எனக்கு ஒவ்வொரு யுகம் போலத் தோன்றியது. நம் அன்பிற்குரியவர்களை நேரில் பார்த்து ஸந்தோஷ மடைவதற்கும், அவர்கள் கடிதத்தைப் படித்து சந்தோஷ மடைவதற்கும் வித்தியாச மில்லையா? நான் ஊர் வந்து சேர்ந்து ஆறுமாதமாவதற்குள் சுமார் ஐம்பது கடிதங்கள் அவளுக்கு அனுப்பினேன். இது சிலருக்கு பரிகாசமாகத் தோன்றலாம். ஆனால் என்ன செய்வது? நான் சாரதையை அவ்வளவு தூரம் நேசித்தேன். அவள் நினைவே என் உள்ளத்தில் சதா பெருகி நின்றது. எனது ஆசைக்கும், அன்புக்கும், இனியவாழ்வுக்கும், அகக்களிப்புக்கும் காரணமாயிருந்த அப் பொற்கொடியை, எல்லாவற்றிற்கும் என் பிராணனாக மதித்திருந்த அம் மங்கையைச் சந்தேகிப்பதா? அப்படி அவளைச் சந்தேகித்தால் இவ்வுலகில் நம்பத்தகுந்தவர்கள்வேறில்லையென்று உறுதியாய்ச் சொல்வேன். ஆகவே, நான் சற்றுக் கோபத்தோடு சபாபதியை நோக்கி, "நண்பனே! என் மீது நீ சந்தேகம் கொள்ளவேண்டாம். லலிதா விலாசத்துச் சாரதா நீ நினைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவளல்ல" என்றேன்.

ஃ

சபாபதி ஒன்றும் பேசவில்லை. அவன் என்னிடமிருந்த பத்திரிகையை வாங்கி வாசிக்க ஆரம்பித்தான். கோட்டாறு குமரப்ப செட்டியார் கடையிலிருந்து பதினாயிரம் ரூபாய் நோட்டுகள் களவு போய் விட்டதென்றும், திருடன் அகப்படவில்லை யென்றும் வாசித்துக் காட்டினான். சற்றுநேரம் சென்றதும் தபாற் சேவகன் சில கடிதங்கள் கொண்டு வந்துகொடுத்தான். அழகிய பாண்டியபுரத்திலிருந்து எனக்குக் கடிதங்கள் வந்து இரண்டு வாரமாய்விட்டபடியால், நான் ஆவலோடும் ஆத்திரத்தோடும் கடிதங்களைப் பிரித்துப் பார்க்கத் தொடங்கினேன். முதலில் சாரதையின் காதற் கடிதங்கள் இருக்கின்றனவா என்றுஆராய்ந்தேன். அந்தோ! ஒரு கடிதமேனும் இல்லை. மீண்டும் சோதித்தேன். என் முயற்சிக ளெல்லாம் வீணாயின. என்னை அறியாமலே என் மனம் சஞ்சலமடைந்தது. சாரதைக்கு என்ன நேர்ந்ததோவென்று வருந்தினேன். உடனே ஊர் சங்கதியை அறிய விரும்பி நண்பன்

---

உத்கிருஷ்டமான காரியங்களைச் செய்பவர்களே அழகானவர்களென்று எண்ணப்படுவார்கள். அந்த அழகுக்குப் பிறகே முக அழகு.

இராமநாதனின் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தேன். அக்கடிதத்தின் இறுதிப் பாகத்தைப் படிக்கு முன் என் கரம் நடுங்கிற்று. மயிர்க் கூச்சல் எடுத்தது. இதயத்தில் மின்சார சக்தி ஊடுருவிப் பாய்ந்தது போல் தோன்றியது. எனக்குப்பேச நாவெழவில்லை. கையில் இருந்த கடிதம் நழுவிக் கீழே விழுந்தது. என் நிலைமையைக் கண்ட சபாபதி திடுக்கிட்டுக் கடிதத்தை எடுத்துக் கீழ்வருமாறு வாசித்தான். ஃ

அழகியபாண்டியபுரம்.

ஷ ஸ்ரீ உ

ஆருயிர் நேசரே !

கடிதம் எழுதக் காலதாமதம் நேர்ந்ததற்கு மன்னிக்கவும். கலிகாலமாதலால் மனிதரின் ஸ்வபாவம் நிமிடந்தோறும் மாறிக் கொண்டிருப்பது ஒரு வியப்பாகாது. வி. டி. நாதன் என்னும் புது மனிதன் உன் மாமனார் மரகதசுந்தரம் பிள்ளையின் புது மருமகனாகப் போகிறான். பார்ப்பதற்கு அவன் ஒரு பிரபு குமாரன் போல் காணப்படுகிறான். அவனுடைய சொந்த ஊர் கும்பகோணம் என்றுகேள்விப் படுகிறேன். அவனுக்கு அளவற்ற செல்வம் இருக்கிறதாம். அவன் இங்கு வந்து குடியிருக்கத் தொடங்கி ஒரு மாதமாகிறது. அதற்குள் உனது மாமனாரின் நட்பை எப்படியோ பெற்று லலிதா விலாசத்துக்குச் சென்று வருகிறான். உன் மாமனார் செட்டுத்தனத்தைக் காட்டாமல் தடபுடலாய் விருந்துகள் நடத்தி உபசாரம் செய்து வருகிறார். அவனது நாகரீக நடையுடை பாவனைகளில் மயங்கி சாரதையும் அவனுக்கு அடிமையாகி விட்டாள். அவன் அவளுக்கு புதுபுது ஆடையாபரணங்கள் வாங்கி நித்தமும் வெகுமதியளிக்கிறான். உன் அத்தை அன்னபூரணி அம்மாளின் சந்தோஷத்திற்கோர் அளவேயில்லை. கலியாணம் வருகிற திங்கட்கிழமை நடைபெறும்.

நீ இதைப்பற்றிக் கவலையுறவேண்டாம். உன் மாமனார் பணத்திற்காசைப்பட்டு சாரதையை நேற்று வந்தவனுக்குக் கொடுக்கப் போகிறார்; அது ஆச்சரியமன்று. உன்னை அண்ணன் மகன் என்று பாராமல் உன் அத்தையும் அவர் பேச்சுக்குத் தகுந்தபடி தாளம் கொட்டுகிறாள். எல்லா உறவும் உன் தந்தை இறந்ததோடு போயிற்று என்பது அவள் எண்ணம் போலும்! சாரதா சிறு பருவ விளையாட்டில் துணையாய் நின்ற உன்னை அறவே மறந்து புதிதாய் வந்து முளைத்த மனிதனை மணக்க மனமிசைந்ததுதான் எங்களுக்கு ஆச்சரியத்திலும் ஆச்சரியமாயிருக்கிறது. உன்னோடு பால்ய முதல் பழகிய நினைவையும், நீ அவளிடத்தில் வைத்த அன்பையும், விசுவாசத்தையும் அவள் எப்படித்தான் மறந்தனளோ! விடுமுறை கிடைத்ததும் நீ ஊர் வந்து சேர்.

என்றும் உன் அன்பை மறவாத,

இராமநாதன்.

ஃ

சபாபதி கூறிய தேறுதலால் நான் ஒருவாறு ஆறுதலடைந்தேன். எனினும், பற்பல எண்ணங்கள் என் மனதில் தோன்றி விவரிக்க வொண்ணாத வேதனையை விளைத்தன. பால்ய

---

மற்றவர்களுடைய சரக்கைப் பார்த்துப் பொறாமைப் படுகிறவர்கள் தங்களிடத்துள்ள சரக்கின் மேன்மையை அறியத் தவறிவிடுகிறார்கள். பிறமாதர் மீது இச்சையுள்ளோன் தன் மனைவியின் லாவண்ய ராசிகளை மதிப்பதேயில்லை.

கால சரிதங்களையெல்லாம் நினைத்த போது இன்னுயிர் நேசனாகிய இராம நாதனின் கடிதத்தில் காணப்பட்ட விஷயங்கள் உண்மையாயிருக்கக் கூடுமோ என்ற ஐயம் என் மனதில் எழுந்தது. அன்றே ஒரு கடிதமெழுதிச் சாரதைக்கு அனுப்பினேன். இரண்டு நாட்களுக்கப்பால் எனக்கு ஒரு கடிதம் கிடைத்தது. நான் பித்துப் பிடித்தவனைப் போல் கடிதத்தைப் பிரித்தேன். என் எதிர்கால இன்பவாழ்க்கை அக்கடிதத்தைப் பொறுத்திருந்தது. அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

தங்கள் கடிதம் கிடைத்தது. ஒரு யௌவன மங்கைக்கு இம்மாதிரி கடிதம் வரைந்தது பெருந்தப்பிதம். இது கல்வி கற்ற தங்களுக்குத் தெரியாமற் போனதைக் குறித்து மிகவும் விசனிக்கிறேன். சாரதா.

ஃ

வெகு நாட்களாக அநேக கடிதங்களை அழகிய வசிகரச் சொற்களால் தொடுத்துவிடுத்த அம் மங்கை நல்லாள் இப்பொழுது இவ்விதம் வரைந்ததைப் படித்ததும் நான் தலையில் இடிவிழுந்தவன் போல் திடுக்கிட்டு ஆவி சோர்ந்து அப்படியே உட்கார்ந்துவிட்டேன். என் இதயத்தில் விஷம் தோய்ந்த கூரிய சரங்கள் நுழைந்தது போன்ற வேதனை யுண்டாயிற்று. எனது இன்னுயிர்க் காதலி—என் அபீஷ்டங்களுக்கும் ஆசைகளுக்கும் நாயகமாயிருக்கக் கூடியவள்—எனக்கே சொந்தம் என நான் சுதந்தரம் பாராட்டி வந்த அந்நங்கை—என்னை அன்னியனாக மதித்துக் கடிதம் வரைந்ததே எனது பெருத்த எண்ணங்களும், ஆசைகளும், நம்பிக்கையும் யாவும் வீணாய்முடிந்தன வென்று கலங்கினேன். உலகம் முழுதும் இருள் மயமாய் எனக்குத் தோன்றிற்று. அன்றுசாப்பாடு ஒன்றும்பிடிக்கவில்லை. நித்திரை யின்றி இரவு முழுதும் தத்தளித்து வருந்தினேன். எனக்கு ஜீவிதத்தில் ஆசை குறைந்தது. ஸ்திரீ வர்க்கத்தினிடமே வெறுப்பு தோன்றிற்று. விடுமுறை நாளில் ஊருக்குச் செல்லவே மனம்வரவில்லை. என்னுடைய எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணானேன்.

ஃ

அன்று மாலை சபாபதி வீடுவந்து சேர்ந்ததும் "கருணாகரா! என்னை அழகிய பாண்டியபுரத்துக்கு மாற்றி விட்டார்கள். நாளைக் காலையில் புறப்படவேண்டும். உன்னையும் கூடஅழைத்துப் போக வேண்டுமென்றிருக்கிறேன்" என்றான்.

"நண்பனே! அழகிய பாண்டியபுரத்தை நான் விஷம்போல் வெறுக்கிறேன். நீ என்னை அழைத்துப் போக வேண்டாம். உனக்கு வேண்டியதைச் செய்ய இராமநாதன் இருக்கிறான் என்று கூறினேன்.

"அப்படிப்பிரமாதமான காரியம் என்ன நடந்து விட்டது? இது நாளைக்கும் உலகில்நடக்கும்சங்கதித்தானே? அன்பற்ற இடத்தில் ஆசை வைத்து ஏமாறினோர் பலர். பால்யமுதல் அன்பு காட்டி நம்பி நின்ற உன்னை மோசம் செய்த சாரதைமேல் இன்னும் நாட்டம் செலுத்தி வாட்ட மடைவதில் என்ன பயன்? அன்பு மாறிப் பேத மனதாய் விட்டவர்கள் எவ்வளவு உபசரிப்பினும் பழைய அன்பைக் காட்டுவார்களா? நீ என்னதான் நெருங்கிச்

---

ஒரு ஆசிரியர் எத்துணை உயரிய மேதாவியாகத் திகழ்ந்தாலும், அவரது ஜென்ம சுபாவமான இழிகுணங்கள் அவரை விட்டு நீங்குவதேயில்லையாம்.

செல்வினும், அவர்கள் பிரிந்து தூரப் போகவே பார்ப்பார்கள். மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டு சந்தோஷமாயிருக்கப் பார்ப்பதே சரீர சுகத்தைக் கெடுத்துக் கொள்ளாதிருக்க வழி" என்றான் சபாபதி.

ஃ

மறு நாள் காலையில் நாங்கள் புறப்பட்டு அழகிய பாண்டியபுரம் போய்ச் சேர்ந்தோம். இராமநாதன் வந்து எங்களை அன்போடு தழுவிக் கொண்டான். சாரதைக்கும் வி. டி. நாதனுக்கும் கலியாணமாகி இரண்டு நாட்களாகின்றன என்றும், கலியாணமான பின் மணமகன் லலிதா விலாசத்திலேயே தங்கியிருக்கிறானென்றும் அவன் கூறினான்.

ஃ

நானும் சபாபதியும் ஒரே வீட்டில் தங்கினோம். ஊர் ஜனங்களுக்கு வி. டி. நாதனிடம் அளவற்ற பிரியம். அவன ஆஸ்தி யெல்லாம் சாரதையைச் சேருமென்று அவர்கள் பேசிக்கொண்டனர். பேராசைக்குஉறைவிடமான அக்குடும்பத்தினரும் அதையேபிரதானமாகக் கருதி யிருந்தனர். நண்பர்களின் பரிகாசத்துக்கஞ்சி நான் அதிகமாய் வெளியே செல்லவில்லை. ஆனல், அவர்கள் அடிக்கடி வீட்டுக்கு வந்து என்னைத் தொந்தரை செய்தனர். அழகிய பாண்டியபுரத்துக்கு வந்த பின் என் மனத்துயரம்—வயிற்றெரிச்சல் பன்மடங்கு அதிகரித்தது. ஆதலால் நான் திருவனந்தபுரத்துக்குத் திரும்பிவிட நினைத்தேன்.

ஃ

ஒரு வாரம் சென்றது. ஒரு நாள் மாலை நான் வீட்டு வாசலில் நிற்கும் போது ஒரு மோட்டார் வண்டி மெல்ல வீதி வழியே வந்தது. அதில் என் அன்பை அலக்ஷியம் செய்தவள், என்னை மணந்து கொள்வதாக ஆசை காட்டி மோசம் செய்த பாதகியாகிய சாரதா தன் மணவாளனோடு சல்லாபமாய்ப் பேசிய வண்ணம் உட்கார்ந்திருந்தாள். வண்டி வாசலெதிரே வந்ததும் அவள் என்னை நோக்கி ஏளனமாக நகைத்துத் தன் கணவனிடம் ஏதோ கூற, அவன் என்னை அலக்ஷியமாக ஏற இறங்க நோக்கி தலையசைத்துக்கலகலவென நகைத்தான். அச்சமயம் என் மனம் எத்தகைய நிலையில் இருந்திருக்கும் என்பதை இதைப் படிப்போரே ஊகித்துணர்ந்து கொள்ள வேண்டும். என் மனதில் ஆத்திரம் பொங்கியது. அவள் மீது வெறுப்புண்டாயிற்று. என்னை வஞ்சித்த அச்சண்டாளியை அப்படியே நசுக்கிவிட எண்ணி வீதியில் கிடந்த பெரியகல்லைக் கையில் தூக்கிக்கொண்டு மோட்டாரை நோக்கி ஓடப்போனேன். அதற்குள் சபாபதியும் இராமநாதனும் என்னைப் பிடித்துக் கொண்டார்கள். இல்லையேல் நானே அவர்களை எமபுரிக்கு அனுப்பியிருப்பேன். அப்பால் சாந்த மடைந்ததும் நான் செய்யப் போனது பெரும் பிழையென்றுணர்ந்து வருந்தினேன்.

ஃ

மறுநாள் காலையில் லலிதா விலாசத்தில் எழுந்த கூக்குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். காரணத்தை அறிய விரும்பி வெளியில் வந்தபோது என் மாமனர் மரகதசுந்தரம் பிள்ளையின் குரல் கேட்டது. சற்று நேரம் சென்றதும் லலிதாவிலாசத்திலுள்ள வேலைக்கார னொருவன் ஆத்திரத்தோடு ஓடி வந்து, "பதினயிரம் ரூபாய் நோட்டுகளும், வைர நகைகளும் களவு

---

பிறருக்கு உதவி செய்ய இணங்குவது—நமது சுயநல எண்ணங்களையும் அந்தசமயம் அவர் அத்துடன் நிறைவேற்றிக் கொடுப்பவரா யிருப்பதால் தான்.

போய் விட்டதாம்; எஜமான் தங்களை அழைத்துவரச் சொன்னார்" என்று சபாபதியை நோக்கிக் கூறினான்.

ஃ

அதைக் கேட்டதும் சபாபதி என்னை ஏறிட்டு நோக்கினான். நான், "இது கடவுள் தண்டனை. அன்பினரை அலக்ஷியம் செய்து மனம் நோக வைப்பவர்கள் வாழ்வு வெகுநாளைக்கு நீடித்து நிற்பதில்லை. பழைய குப்பைத் தொட்டிக்கே சீக்கிரம் திரும்பி விடுகிறது" என்றேன். "இனி எனக்கு நல்ல வேலை கிடைத்தது" என்றான் சபாபதி. "ஜாக்கிரதையாயிரு. கள்ளன் அற்பனல்ல" என்று கூறி நான் அவனை எச்சரித்தேன். நாங்கள் இவ்வளவும் பேசுவதற்குள் மீண்டும் ஒரு வேலைக்காரன் ஓடி வந்தான். உடனே சபாபதி நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று சில சேவகர்களை அழைத்துக் கொண்டு லலிதா விலாசத்தை அடைந்தான். மத்தியானம் மூன்று மணிக்கு அவன் திரும்பி வந்து கேஸ் மிகவும் சிக்கலானதென்றும், உண்மையை வெளிப்படுத்துவது மிகவும் பிரயாசையான காரியமென்றும் கூறினான். அன்றெல்லாம் அவன் ஏதோ சிந்தித்தவண்ணமிருந்தான். நானோ பற்பலவிதமாக நினைத்து வருந்திக்கொண்டிருந்தேன்.

ஃ

மறுநாள் காலையில் நான் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்தேன். கேஸின் உண்மை வெளியானதும் ஊருக்குப் போகலாமென்று கூறி சபாபதி என்னைத்தடுத்தான். ஆனால் நான் அதற்கு இணங்கவில்லை. ஏனெனில் எனக்கு கேஸைப் பற்றி அறியவேண்டுமென்ற ஆசையே உண்டாகவில்லை. பணப்பேய் பிடித்த அவர்கள் வீடு தீப்பற்றி எரிந்தால் கூட எனக்கு அது ஒரு விசேஷமாகத் தோன்றாது. கடவுள் தண்டனையை அவர்கள் அனுபவிக்க வேண்டியதே யென்று நினைத்து நான் புறப்பட்டுத் திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்தேன். ஆனால் என் துன்பங்கள் மட்டும் நீங்கவில்லை. நான் அழகிய பாண்டியபுரத்தை விட்டு நீங்கினது முதல் என் மாமன், அத்தை முதலானோர் என்னைச் சந்தேகிக்க ஆரம்பித்தனர். அவர்கள் வீட்டில் களவுபோனதற்கு நானே காரணம் என்று அவர்கள் தீர்மானித்தனர். இதில் அவர்களுக்கு சந்தேகம் தோன்றுவது சகஜந்தானே. நான் அவர்களிடம் கொடிய விரோதம் பாராட்டுவதற்குத் தகுந்த காரணம் இருந்ததல்லவா?

ஃ

இந்த விசேஷங்களை யெல்லாம் நான் சபாபதியின் கடிதம் மூலமாக அறிந்து கலங்கினேன். வர வர ஒரு பைத்தியக்காரனைப் போல் ஆனேன். துயரத்தைச் சகித்துக்கொள்ள முடியாதபோது பச்சைக் குழந்தை போல் தேம்பித் தேம்பி அழுதேன். பெண்களை இனி கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை யென்று சபதம் பூண்டேன். இல்லறவாழ்க்கை யென்பது ஒரு நரகம்போல் எனக்குத் தோன்றியது. ஒரு பிரம்மசாரியாயிருந்து காலம் கழிக்கத் தீர்மானித்தேன்.

ஃ

இரண்டு மாதங்கள் சென்றன. சபாபதியிடமிருந்து கடிதம்வரவில்லை.

---

அனுபவ ஞான நூல்களை அலக்ஷியமாயும் அவமதிப்பாயும் இகழ்வோர் தங்களின் துஷ்கிருத்தியங்களெல்லாம் அந்நூலில் அப்படியப்படியே வர்ணனை செய்யப்பட்டிருப்பதற்கு ஆத்திரப் படுவோரா யிருக்கலாம்.

போட்ட கடிதத்திற்கும் பதில்கிடைக் கவில்லை. ஆதலால் அவனுக்கு என்ன நேர்ந்ததோவென்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில், ஒருநாள் ஒரு தபாற் சேவகன் சில கடிதங்களையும், அவ்வாரம் வெளியான பத்திரிகையை யும் கொண்டு வந்து கொடுத்தான். நோக்கிய போது அவற்றில் சபாபதி யின் கடிதம் காணப்படவில்லை. உடனே மிகவும் வருந்தியவனுய்ப் பத் திரிகையை எடுத்துப் பிரித்துப் பார்த் தேன். அதன் முதற்பக்கத்தில் காண் போர் கண்களையும், கருத்தையும் கவரும் விதம் பெரிய எழுத்துகளில் பின்வருமாறு அச்சிடப்பட்டிருந்தது.

ஃ

உண்மை வெளியாயிற்று.

அழகிய பாண்டிய புரத்தில் பெருந் தனவந்தரான மரகத சுந்தரம் பிள்ளை அவர்கள் வீட்டில் சின்னுட் களுக்கு முன் நடந்த களவு நேயர்கள் அறிந்ததே. இப்போது போலீஸ் இன்ஸ்பெக்டர் கெ. பி. சபாபதி அவர் கள் எடுத்துக் கொண்ட முயற்சியால் உண்மை வெளியாயிற்று. மரகதசுந்த ரம் பிள்ளையின் மருமகன் வி. டி. நாதன் என்பவனே களவுசெய்தவன். அவனது உண்மையான பெயர் கோவிந்த ராவு என்றும், கோட்டார் குமரப்ப செட்டியார் கடையில் இருந் த இரும்புப் பெட்டியை உடைத்துப் பதினுயிரம் ரூபாய் நோட்டுகளைத் திருடியவனும் அவனே யென்றும், இதற்கு முன் பலதடவை அவன் ஜயி லதிகாரிகளின் விருந்தாளியாக இருந் திருக்கிறுனென்றும் விசாரணையில் தெரிய வந்தது. களவுபோன நகை கள் சில அகப்பட்டன. நீதிபதி அவ னுக்கு எட்டு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார். இந்த அவமா னத்துக்கு அஞ்சி அவன் மனைவி சாரதா தற்கொலை செய்து கொண் டாள். ஃ

இவ்விஷயங்களைப் படித்ததும் நான் அப்படியே அசைவற்று உட் கார்ந்து விட்டேன். ஏதோ சில தெய் வீக எண்ணங்கள் என் மனதில் எழுந் தன. அந்நிலையில் எவ்வளவு நேரம் இருந்தேனென்று எனக்கே தெரிய வில்லை.

த. சு. சங்கரலிங்கம்.

[காதலில் ஏமாறவைத்த காரி கையர் ஒரு புறமிருக்க, அந்தக் காத லனுக்கே தங்களின் அரிய கற்பை அந்தரங்கத்தில் தந்து விட்டுப் பின் எதிர்ப்பட்ட தனவந்த னெருவனை மணந்து கொண்டோருமுண்டு. பழைய காதலனுடன் பேசிடில் எங்கு தங்க ளின் முன் செய்கைகள் வெளிப்பட்டு விடுமோவென அஞ்சி அவனை விரோ தித்து நிற்கும் சுந்தரிகளும் இல்லாம லில்லை. ப—ர்.]

---

விவாக நிமித்தம் இரவல் பெற்ற வயிர அட்டிகை காணமற்போக, அதற் காக உள்ள சொத்தை விற்றுக் கடனும் பட்டு வேறொரு வைர அட்டிகையை அதைப்போல ரகசியமாகவே வாங்கித் தந்து விட்டு, அக்கடனை அடைக்கப் பல வருடம் செட்டாக வாழ்ந்து தீர்த்தாள் ஒரு பெண். பிறகு ஒருநாள் இப் பெண் முன்பு இரவல் தந்த பெண்ணைக் காணும்படி நேர, அப்போது தான் வைர அட்டிகை காணமற்போய் வேறு வாங்கிய ரகசியத்தை வெளியிட்டாள். இதைக்கேட்ட இரவல் தந்த பெண் தன் அட்டிகை 20-ரூபாயுள்ள சீமைக் கம லமே தவிர வைரமல்லவென்று சொல்லி அந்தப்பெண் தந்த வைர அட்டி கையைத் திருப்பிக் கொடுக்கவே, போக்கடித்த பெண் பிரமிப்பதானுள்!




# 3. இல்லறம்.

(287-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 234. "மனையாளுக்கு உள்ளது ஒன்றும் சொல்லவேண்டாம்."

நன்கு கற்று விவேகசாலினிகளாயுள்ள பெண்மணிகள் வெகு சொற்பம். படியாதவருள்ளும் புத்தி தீக்ஷண்யமும் ஆலோசனைசக்தியும் அமைதியும் வாய்ந்த பாவையர் உண்டெனினும், அன்னோரின் தொகையும் அதிகமிராது. பெரும்பான்மையாக அவசரப்பட்ட சிந்தையும், பின்னுக்கு வருவதை யோசியாத தன்மையும் கொண்ட மாதராரின் எண்ணிக்கையே மிகுதி. இத்தகையோரிடம் குடும்ப சம்பந்தமான அந்தரங்கங்களை வெளியிடின், அன்னோர் அதைத் தமக்குள் தாமே காப்பாற்றத் திறனற்றுத் தம்முடன் பழகும் பெண்களிடம் தெரிவித்து விட, அது பின் எங்கனும் பரவி அனர்த்தத்திற்கு ஏதுவாதலும் ஸர்வ சாதாரணம். மேலும், பெண்கள் பெரும்பான்மையும் கோழைமனமுள்ளவர்கள்; திடசித்தமற்றவர்கள், எதையும் எவரிடமும் சொல்லி விடக்கூடியவர்கள். ஆதலின், முக்கிய சங்கதிகளை மனையாளிடம் தெரிவிக்காமல் மறைத்து வைப்பதே நன்றென்பது இப்பழமொழியின் தாத்பரியம். பெண்களுக்கு ஆபரணங்களின் மீதே அதிக வாஞ்சை. ஜீவித முதலாகிய நிலங்களை விற்றேனும் நகைகளைச் செய்து அணிந்து அதில் ஒரு கௌரவம் பெறுவதில் மிதமிஞ்சிய விருப்பம் கொள்வர். வீட்டுத் தலைவனோ வட்டிக்கும் விருத்திக்கும் நஷ்டமாய் ஆபரணத்தில் முதலிடுவதில் விருப்பமற்றுத் தான் தேடிய செல்வத்தை நிலபலங்களிலோ, வட்டி தரும் வகையிலோ பத்திரப்படுத்தியிருக்கலாம். அதனை மனையாட்டிக்கு வெளியிடின் அதற்கு நகைகள் செய்து போடும்படி சண்டை பிடிப்பவளாகலாம். எத்தனை நாளைக்கு இந்தச் சொற்ப நகைகளுடன் வெறுங் கழுத்துக்காரியாக நிற்பதென வாதாடவும் வரலாம். ஏராளமாக வருமானம் வரும்பொழுது நன்றாய் உடுத்து நன்றாகத் தின்னுகிறது தானே என்னலாம். இன்னும் தன் தாய் வீட்டினரையும் சேர்த்து வைத்துக் கொண்டு பெரிய கூட்டம் போட்டுச் செலவுகளைப் பெருக்கிச் செல்லலாம். செட்டற்ற விதமாய் கெட்டித்தனமின்றி மட்டித்தனமாகவும் மாறலாம், வரவுள்ள காலந்தன்னிலேயே பின்னுக்கு உதவும்படியாக ஏதேனும் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டுமேயென்ற பெரிய புத்தியற்று, அவ்வப்பொழுது கிடைப்பதனைத்தையும் அப்படியப்படியே செலவு செய்து விட்டுத் தற்காலத்

---

பிரிந்துபோன நண்பர்கள் எவ்வளவோ கேவலமாய்த் தூற்றுகின்றனர். அதற்குக் கூட இருப்பவனும் ஜதை சேர்ந்து கொள்கிறான். ஆனால், இவர்களை விட்டு விலகியவனோ விழித்துக் கொண்டதற்கு ஸந்தோஷித்து இளைப்பாறுகிறான்.

திய சுகத்திலேயே மகிழ்ந்து மயங்கிப் போகலாம். இவ்விதமான சிறுமை பூண்ட நிலையிலுள்ளவளிடம் வீட்டுத் தலைவன் தன் வருமானத்தையோ, தான் ரகசியமாகச் சேர்த்துள்ள செல்வத்தையோ, மற்றும் தன் அந்தரங்கங்களையோ எவ்வாறு வெளியிட முடியும்? எனவே, அவன் அனைத்தையும் தன் மனப் பெட்டியிலேயே பத்திரமாய்க் காத்து வைத்துக் கொண்டு மனையாளுக்கு மறைத்து வாழ்வதே நன்றென்று தோன்றும். இத்தகைய சின்ன புத்தி கொண்ட பெண்டுகளுக்காகவே இப் பழமொழி ஏற்பட்டது. படித்தபுத்திசாலி களும், தக்க ஆலோசனை சொல்லக் கூடியவர்களுமான பெண்களிடம் எந்த அந்தரங்கத்தையும் சொல்லவும், அவர்களிடம் யோசனையைப் பெறவும் இப் பழமொழி தடுக்க வில்லை. தனக்கு ஜீவதுணையாயுள்ள மனைவியிடம் எதை யும் சொல்லிவைத்து, அவளுடைய யோசனையுடனும் கலந்து எதுவொன்றை யும் செய்வது தான் ஒழுங்காகும். அதிலும் ஒரு நிதானம்—ஒரு எல்லை இருக் கவேண்டுமென்பதுவும் இப்பழமொழியின் மற்றொரு கருத்தாக அமைதலும் கூடும்.

ஃ

235. "மாமியார் உடை குலைந்தால் வாயாலும் சொல்லக் கூடாது, கையாலும் காட்டக் கூடாது"

மருமகள் எது செய்தாலும் குற்றம் என்பது மாமியாரின் கொள்கை யாயிருந்தால் அப்புறம் மருமகள் போகிறவழிதான் எப்படி? உடை குலைந்தால் —உடுப்பு அதாவது புடவை கொஞ்சம் ஒதுங்கியிருந்தால், அதைச் சரியாய்ப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று அருகேயிருக்கும் மருமகள் வாயாலாவது சொல்லவேண்டும்; அல்லது கையாலாவது காட்டவேண்டும். இரண்டும் குற்றமாய் விட்டால் அப்புறம் அவள் என்ன செய்கிறது? ஒருவரிடம் பூரணத் துவேஷம் கொண்டு விட்ட பிறகு அவர்கள் என்ன செய்தாலும் பொல்லாங் காகவும் தன்னை மயக்கி வசப்படுத்துவதற்குச் செய்ததாகவும் தோற்றுமேயன்றி நல்லவிதமான தன்மையில் அதை அர்த்தம் செய்து கொள்ளப் புத்திஏற்படாது. மேலும் செய்யும் எதுவும் குற்றமாகவேகாணும். இந்தப் பழமொழியின் கருத்து அன்பற்ற மாமியாராயிருந்தால் அவளுடன் மனமொத்து ஒரு குடும்பமாய்க் கௌரவமாக வாழ்வது வெகு சங்கடம் என்றபடி,

236. "அன்பற்ற மாமிக்குக் கும்பிட்டாலும் குற்றந்தான்."

மேற்சொன்ன பழமொழியின் கருத்தை இன்னும் தெளிவாக இப் பழமொழி விளக்கிக் காட்டுகின்றது. விசேஷ காலங்களிலேனும், ஒரு புதுச் சேலை தரித்துக் கொண்டபொழுதேனும் பெரியோர்களுக்கு வணங்கி ஆசி பெறுவது ஹிந்துக்களின் வழக்கம். அவ்விதமாக ஒரு மருமகள் தன் மாமியை வணங்கும் பொழுது, அந்த மாமி அன்பற்றவளாயிருந்தால், அது ஒரு பாசாங் குத்தனமான கும்பிடு என்றும், தன்னை மயக்குவதற்காகப் போட்ட வணக்க மென்றும், இதிலெல்லாம் தான் ஏமாந்து போகக் கூடியவளல்ல வென்றும், அந்தப் பயலை மயக்கிச் செய்து போட்டுக் கொண்டாள்—வாங்கிக் கட்டிக் கொண்டான் என்றும் அப்பொழுதே குத்தலாகவும் சுடு சொல்லாகவும் பேசி

---

பிறர் மாறிவிட்ட நிலைமைக்குத் தக்கபடி தன்னைத் திருத்திக்கொண்டு நடந்துகொள்ள ஒவ்வொருவனும் கற்றுக்கொள்ள வேண்டும். பழங்கால அன்பை இப்போது நினைப்பதில் பயனில்லை. அது சென்றுவிட்ட பழயகதை.

வசைமாறி வழங்கிவிடுவாள். விசேஷ சந்தர்ப்பத்தில் மாமியைக் கும்பிடாதிருந்தாலோ, அந்தச் சிறுக்கி என்னை மதித்தாளோ, எனக்கு ஒரு வணக்கம் போட்டாளா என்றும் தனது பிரஸங்கத்தைத் தொடங்கிக்கொள்வாள். எவ்வகையிற் சென்றாலும் குற்றமாகி மருமகள் கண்ணீர் விடவேண்டியதாகவே முடியும். ஆனால், இவ்விதம் உத்தமியான மருமகள் கண்ணீர் சிந்திய குடும்பங்கள் செழித்து வாழ்ந்ததில்லை யென்பதும் ஒரு அனுபவமாம்.

## 237. "மாமியார் உடைத்தால் மண்கலம், மருமகள் உடைத்தால் வெண்கலம்."

மண்கலம் அதாவது மண்பானைக்கு அதிக விலையில்லை. வெண்கலம் அதாவது வெண்கலப் பானையோ அதிக விலையுள்ளது. ஒரு வெண்கலப் பானையை மாமி உடைத்து விட்டால் ஏதோ கை தவறிப் போயிற்று, மண் பானைபோல உடைந்து போயிற்று, போனது போகட்டும், அது ஒரு மண் சட்டி போனதுபோல நினைத்துக் கொள்கிறது என்பாள். அதே வெண்கலப் பானையை மருமகள் உடைத்து விட்டாலோ நூறுவருஷங்கள் வரையிலும் அதைமறவாமல் சொல்லிக் காட்டுவாள். அதை மருமகள் உடைத்தால் குடியே முழுகிப் போய்விட்டதென்றும், நேற்று தான் வாங்கிய புத்தப் புதிதான பாத்திரத்தைப் பாவி உடைத்து விட்டாளே, அதை ஐந்து ரூபாய்க்கு எத்தனையோ அருமையாக வாங்கினேனே, என் மீதுள்ள ஆங்காரத்திற்காகவல்லவா அப்படிப் போட்டு உடைத்தாள்—சொத்தை விழப் பண்ணினாள் என்றும் கண்டபடி பேசி ஏசிக் குற்றம் சாட்டுவாள். இது ஒரு மாமியின் கோணலான வேறுபட்ட மனோபாவத்தைக் காட்டும் பழமொழி. இத்தகைய மாமிகளான புண்ணியவதிகளை இன்றைக்கும் எத்தனையோ குடும்பங்களில் பார்க்கலாம்.

### பிறர் வீடென்றால் நிர்ப்பந்தமே.

மற்றவர்கள் நம் வீட்டிற்கு வருகையில் வெகு சௌகரியமாய்த் தங்கிச் செல்கிறார்கள். நமது சௌகரியங்களைக் குறைத்துக்கொண்டு அவர்களுக்கு எவ்வளவோ பணிவிடை செய்கிறோம். காபி யுண்பதில்லை, பால்தான் உண்பது எனில் அப்படியே நடத்துகிறோம். நாம் அந்தப் பிறர் வீட்டுக்குச் செல்லினோ எந்த சௌகரியமும் நமக்குக் காணோம். காலை ஸ்நானத்திற்கு ஜலம் கிடைப்பதே ஸஞ்சலமாகிறது. இரவில் பாயையும் கக்கூஸுக் கருகில்போட அந்தத் துர்மணம் சகியாது திண்டாடுவதன்றி, விளக்கையும் ஆற்றி விடுகிறார்கள். இருட்டில் தவிக்க நேருகிறது. தம் வீட்டுக்கு வருவோரின் சௌகரியங்களைக் கவனிப்போர் வெகு சொற்பமே. பொதுவாகப் பிறர் வீடு எனில் எப்போதும் நிர்ப்பந்தந்தான். நம் வீடுபோல் சுதந்திரமில்லை.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.

### அத்தியாயம்—2.

### தந்தையும் குமார்த்தியும்.

(296-ம் பக்கத் தொடர்ச்சி.)

### III

உடனே அவன் தன்னிடமிருந்த துப்பாக்கியினல் அப்புலியைச் சுட்டு வீழ்த்தி அவள் உயிரைக் காப்பாற்றினன். என்னிடம் அந்த வேளையில் எவ்வித ஆயுதமுமில்லை. அவன் அந்த சமயம் அங்கு இல்லாவிடில் நாங்கள் இருவரும் புலிக்கு இரையாவது நிச்சயம். அவனல்தான் நாங்கள் காப்பாற்றப்பட்டோம். ஆதலின், அவனுக்கே சொந்த சொத்தாகக் கமலவல்லியைக் கொடுத்து விட்டேன். அந்த உத்தமமான மனிதன் யார் எனில், என் தம்பி சீனிவாச முதலியாரின் குமாரனை இராஜ சந்திரன் தான். கமலவல்லி அவனிடம் எவ்வளவோ பிரீதி வைத்திருந்தாள். அவனும் பிராணனுக் கொப்பான அன்பை அவளிடம் கொண்டிருந்தான். என் கடைசி காலத்தில் அவனைப் பார்ப்பதற்கு இல்லாமற்போய் விட்டது. அவனே எனக்குக் கரும கிரியைகள் செய்வானென நம்பியிருந்தேன். என் குழந்தையான அவன் தற்கொலை செய்துகொண்டு பர்மாவில் இறந்து விட்டதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். அவன்மீது ஏற்பட்ட கொலைக் குற்றம் சுத்தப் பொய்யாகவே இருக்குமென்று சத்தியமாகச் சொல்லுவேன். ஒரு சிறு பாவத்தைக் கூடச் செய்ய அஞ்சுகிற கோழை மனத்தினனுவான். அவன் தந்தை ஒரு முட்டாளான பிடிவாதக்காரன். பல வருஷங்களாகக் கௌரவ் மாஜிஸ்திரேட்டாக இருக்கிறனென்ற பெருமையே தவிர, காருண்யகுணம் அவனிடம் இல்லவேயில்லை. சட்டம் எப்படிச் சொல்லுகிறதோ அதின்படி தண்டிப்பவன். சட்டத்துடன் காருண்யத்தையும் நினைக்க வேண்டுமென்ற நல்லபுத்தி அவனுக்கு இல்லை. ஆனதால், அவனிடம் பேசுவதையே விட்டுப் பல வருஷங்களாயிற்று. அவனும் என்னிடம் வருவதற்கு அஞ்சி இந்தப் பக்கம் எட்டிப் பார்ப்பதில்லை. நானும் அவனை விரும்பவில்லை. ஆனல், அவன் மனைவியிடத்திலும், அவன் குமாரத்தியான கிருஷ்ணவேணி யிடத்திலும் எனக்குப் பூரண

---

ஒரு சத்தியாக்கிரகிக்குத் தியாகத்தையும் பொதுஜன அபிப்பிராயத்தையும் விட வேறு ஆயுதமில்லை.—மகாத்மா.

மான அபிமான முண்டு. அவர்களை நான் பார்க்க விரும்புகிறேன்

என்றார். அந்த சமயத்தில் சீனிவாச முதலியாரும் அவர் குமாரத்தி கிருஷ்ணவேணியும் உள்ளே நுழைந்தார்கள். சபாபதி முதலியார் தன் தம்பியைப் பார்த்துத் தன் பக்கத்தில் உட்காரும்படி சொன்னார். சீனிவாச முதலியாரும் தன் தமயனார் பிழைக்க மாட்டாரென்பதை யறிந்து கண்ணீருடன் கதறினார். கிருஷ்ணவேணியை சபாபதி முதலியார் முத்தமிட்டு கமலவல்லியின் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார். சற்றுநேரம் அமைதியாகக் கழிந்தது. அடுத்த மறு நிமிஷத்தில் திடீரென்று கபம் வந்து அடைத்துக் கொள்ளத் திக்கு முக்காடினார். மேல் சுவாசம் உண்டாய் விட்டது. அப்பொழுது இரவு மூன்று மணியிருக்கும். சபாபதி முதலியார் இம்மண்ணுலகில் இது காறும் அனுபவித்த அருமை, பெருமை, துன்பம், இன்பம், ஏக்கம் ஆகிய இவற்றை யெல்லாம் விட்டு விண்ணுல கெய்தினார். கமலவல்லி ஓ வென்று இடி இடித்தாற் போலச் சப்த மிட்டெழுந்து தன் தந்தையின் மீது புரண்டழுதாள். மார்பிலும் முகத்திலும் அறைந்து கொண்டாள். சற்று நேரமானதும் அவ்விடத்தை விட்டுப் புறக்கடைக்குச் சென்றாள். இவள் எங்கு போகிறாளென்று கண்ணப்பன் யோசித்தான். இவள் வேகமாகச் சென்று அங்கிருந்த ஓர் கிணற்றில் குதித்துவிட்டாள். இதைக் கண்ட வேலைக்காரர்கள் ஓ வென்று கத்தினார்கள். ஒரு வேலைக்காரன் தைரியமாக உள்ளே குதித்தான். இது சங்கதி யறிந்த கண்ணப்பன் முதலிய எல்லோரும், கிணறு மிகவும் ஆழமான தாகையால் திகிலடைந்து அங்கு ஓடி வந்தார்கள். கிணற்றில் குதித்த வேலைக்காரன் மூழ்கிவிட்ட கமலாவைப் பத்திரமாக மேலே தூக்கி, ஓர் கயிறுவிடுங்கள் என்று கத்தினான். உடனே ஓர் கயிறு விடப்பட்டது. வேலைக்காரன் பத்திரமாகக் கமலாவைத் தூக்கிக்கொண்டு கிணற்றின் ஓரத்தில் முன்வந்திருந்த கற்களில் காலை யூன்றியபடியே கயிற்றைத் தாங்கி வெளியே வந்தான். கமலா ஸ்மரணையற்றுக் கிடந்தாள். அவள் அணிந்திருந்த உடைகளைக் கழற்றி வேறே யணிவித்து நன்றாகத் துடைத்து உபசாரம் செய்து ஓர்படுக்கையின் மீது கம்பளி போர்த்துப் படுக்கவைத்தார்கள். டாக்டர் அவளைக் கவனித்தபடியே யிருந்தார்.

ஃ

முதலியார் இறந்த சங்கதி கம்பியில்லாத் தந்திபோல் ஊர்முழுதும் பரவிவிட்டபடியால், அவருக்குப்பணம் கடன் கொடுத்திருந்தவர்க ளெல்லோரும் வந்து சாரதா விலாசத்தில் சூழ்ந்துவிட்டார்கள். சிலர் சாதுவாக விருந்தார்கள். சிலர் முரட்டுத்தனமாக யார் என்னபதில்சொன்னபோதிலும் கேளாமல் தொந்திரை செய்து பணத்தை உடனே செலுத்தவேண்டுமென்றார்கள். சிலர் பணத்தைக் கொடுக்காமல் பிணத்தை யெடுக்கலாகாதெனக் கூறினார்கள். அவருடையகுமாரத்திஎங்கே...என்று சிலர் கேட்டார்கள். கண்ணப்பன் அதிக கோபத்துடன், அதைப்பற்றி உங்களுக்கு அவசியமில்லை, எல்லோரும் நாளையதினம் இங்கு வாருங்கள் நான்

---

நம்மை எவரும் விரும்பாவிடில் அவர் மீது துவேஷம் கொள்ளாமல் நல்லெண்ணத்துடன் அவ்விடத்தை விட்டகன்று விடுவதே நலமாகும். இதுவே இயேசுநாதர் போதித்துள்ள நீதி.

உங்களுக் கொடுக்கவேண்டிய கடனைக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் முரட்டுத்தனம் செய்தால் உங்களால் ஒரு காசும் பெறமுடியாது. பிணத்தைத் தடுக்க சட்டப்படி உங்களால் முடியாது. இப்போதே ஒரு சமாச்சாரம் சுகாதார இலாகாவிற்கு (Health Department) த்தெரிவித்தால் அவர்கள் பிணத்தைப் பாதுகாப்புடன் வெளிப்படுத்திவிடுவார்களாதலால் உங்கள்ஜபம் இங்கு சாயாது. எல்லோரும் நாளையதினம் வாருங்கள் என்றான். அவர்களும் கண்ணப்பன் ஒரு பிரபல லாயர் என்பதையறிந்து பதில் பேசாமல் சம்மதித்துப் போய்விட்டார்கள். கருமகிரியைகள் யாவற்றையும் சபாபதி முதலியாரின் தம்பி சீனிவாச முதலியாரே செய்தார். மறுதினம் நடக்க வேண்டியவைகளையும் அவரே நடத்தினர். கமலவல்லியைத் தன் வீட்டிற்கு வருமாறு அழைத்தார். அதற்குள் முதலியாரின் தங்கையான கனகாம்புஜம் தன்னிடம் அவள் இருக்கட்டுமென்றும், தான் வெகு பிரியமாய்ப் பார்த்துக் கொள்வதாயும் சொல்ல, அவள் வார்த்தையை மறுக்க முடியாமல் ஒப்புக்கொண்டார்.

ஃ

அன்று பகலில் கடன் கொடுத்தவர்களெல்லாம் ஒவ்வொருவராக வந்து சேர்ந்தார்கள். கனகாம்புஜத்தின் பர்த்தாவான கோவிந்த முதலியாரும், சீனிவாச முதலியாரும் மத்தியஸ்தர்களாக இருக்க, கண்ணப்பன் கடன்காரர்கள் கொடுத்த பத்திரத்தை யெல்லாம் வாசித்துக் காண்பித்தான். சபாபதி முதலியார் வாங்கியிருந்த கடன் ஏராளமாக இருந்தது. அவர் தன்னுடைய ஆஸ்தியை யெல்லாம் தான தர்மம் செய்து செலவழித்து விட்டு இறக்குந் தருவாயில் கடன்காரனாய் விட்டதுமன்றி, தான் அன்புடன் வளர்த்துவந்த பெண்ணையும் அனாதையாக்கி விட்டார் என்றான். கண்ணப்பன் பத்திரங்களை யெல்லாம் தனபாலனிடம் கொடுத்து மொத்தம் வட்டியும் அசலும் எத்தனை ரூபாயாகிறது பாருங்கள் என்றான். அவன் சரியாகக் கூட்டி மொத்தம் ஏறக்குறைய அறுபதினாயிரம் ரூபாயாகிறது என்றான். அப்பத்திரங்களெல்லாம் 400, 500 ரூபாய் கடன் பத்திரங்கள் தான். ஒன்று மாத்திரம் முப்பதினாயிரம் ரூபாய் பத்திரம். அதற்கு வட்டி அச்சமயம் ஆறாயிரம் ரூபாயாயிற்று. இப்பத்திரத்தைப் பார்த்ததும் கண்ணப்பன் ஆச்சரியமடைந்து அக்கடன் கொடுத்தவனை நோக்கி "ஐயா நான் உங்களுக்கொன்று கூறுகிறேன். அஃதென்னவெனில், நீங்கள் பிரபுவுக்கு முப்பதினாயிரம் ரூபாய்தான் கைவிட்டுக் கொடுத்தீர்கள். அதற்கு வட்டி இப்போது ஆறாயிரம் ரூபாயாகிறது. இது அநியாயமென யான் கருதுகிறேன். அதுவுமன்றி இப்போது உங்களுக்குக் கொடுக்க அவ்வளவு பணம் எங்களிடமில்லையாதலால் தயவுசெய்து வட்டியில் பாதியும் அசலும் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றான். இதைக் கேட்டதும் அம்மனிதன் அதிக கோபமடைந்தவனாகி நல்ல வேலை செய்தீர், இது தானே நீர் எனக்குச் செய்யவந்த உதவி, யான் மார்வாடி, ரூபாய்களை வட்டிக்குக் கொடுத்து ஜீவிப்பதே என்னுடைய தொழிலாதலால் ஒரு காசும் தள்ளமாட்டேனென்றான்.

---

தன இரண்டு கண்களும் போனாலும் பாதகமில்லை; அதனால் அடுத்த வீட்டுக்காரனுக்கு ஒரு கண்போனால் போதுமென்றானாம் ஒருவன். அவ்விதமே மாமியும்—மகன் செத்தாலும் சாகட்டும், மருமகள் கொட்டம் அடங்கினால் போதும் என்கிறாள்.

கண்ணப்பன் :—உங்களுக்குக் கொடுப்பதற்கு இப்போது அவ்வளவு பணமில்லை....

அவன் :—பணமாயில்லை? முதலியாரிடம் அவ்வளவு, தொகையில்லையென்றறிந்தால் யான் கடன் கொடுத்திருப்பேனு? அவர் குடியிருந்த சாரதா விலாசத்தை எனக்கு விற்றுவிடுங்கள். யான் மேலே கொடுக்க வேண்டிய தொகையை இப்போதே செலுத்தி விடுகின்றேன் என்ருன்.

கண்ணப்பன் சிரித்த முகத்துடன் சாரதா விலாஸமா, அதையெப்போதே அவர் விற்றுவிட்டாரே யென்ருன். அம்மனிதன் அதிக ஆச்சரியத்துடன் "நீங்கள் என்ன பொய் சொல்கிறீர்கள்? அவர் விற்றுவிடுவதாயிருந்தால் யான் வாங்கிக்கொள்ள மாட்டேனு?" என்ருன்.

நான் சொல்வது பொய்யல்ல, உண்மையில் விற்றுவிட்டார் என்று கண்ணப்பன் கூறினன். எவ்வளவு தொகைக்கு விற்றுவிட்டார் கூறுங்கள் பார்ப்போம் என்று அம்மனிதன் கேட்டான். ஐம்பதினுயிரத்திற்கு விற்றுவிட்டார் என்று கண்ணப்பன் கூறினன். இதைக் கேட்டதும் அம்மனிதன் திடுக்கிட்டு ஐய்யய்யோ ஐம்பதினுயிரத்திற்கா, எனக்குத் தெரிந்திருந்தால் நான் அறுபதினுயிரத்திற்கும் வாங்கியிருப்பேனே! இரகசியமாகவன்றே காரியம் முடிந்து விட்டது என்று கூறிக்கொண்டே, யார் அதை வாங்கினுர்கள் என்று கேட்டான்.

யாரா? நான்தான் வாங்கினேன் என்று கண்ணப்பன் கூறினன்.

ஓ! ஓ! நீங்கள் வேடிக்கைக்காகச் சொல்லுகிறீர்கள் என்று அம்மனிதன் நகைத்தான். உடனே கண்ணப்பன் அவனை அழைத்து தனபாலனிடமிருந்த பத்திரங்களை வாங்கிக் காட்டினன். அதைப் பார்த்ததும் அவன் மரம்போல் அயர்ந்து நின்ருன்.

அப்பால் அவனுக்கு வட்டிக்காக மூவாயிரம் ரூபாயையும் அசலும் கொடுப்பதென ஏற்பாடாயிற்று. கண்ணப்பன் கமலாவை யழைத்து அவளிடம் பீரோவிலிருந்த, சாரதா விலாசத்திற்காகக் கண்ணப்பன் கொடுத்த ஐம்பதினுயிரம் ரூபாயை வாங்கி அத்துடன் கமலாவிடமிருந்த மீதிப் பணத்தையும் சேர்த்துக் கடன்களையெல்லாம் அடியோடு ஒழித்துவிட்டான்.

---

## அத்தியாயம்—3.

### அத்தை செய்த மரியாதையும், விவாகமும்.



கடன்கள் யாவும் தீர்ந்த பின்னர் கண்ணப்பன் அங்கிருந்த வேலைக்காரர்களையெல்லா மழைத்து அவர்களுக்கு ஒரு மாதசம்பளம் அதிகமாகவே கொடுத்து வேறு எங்கேயாவது சென்று வேலை பார்த்துக் கொள்ளும்படி கூறிவிட்டான். அவர்கள் அதிக விசனகரமான முகத்துடன் கமலாவிடம் விடை பெற்றுச் சென்ருர்கள். அவர்களைப் பிரிந்திருக்க மனம் பொருமலும் தன் விதியை நினைத்தும் கமலா கண்ணீர் விட்டழுதாள். கோவிந்த முதலியார் கமலாவிற்குத் தைரியம் சொல்லித் தன் வீட்டில் சுகமாக யிருக்கும்படி

---

லங்காஷயரின் ஜனனம் (துணிவியாபாரம்) இந்திய நெசவுத்தொழிலின் சாம்பல் மீதே.

கூறினர். கோவிந்தர் மிகவும் நற்குண முடையவ ராகையால் அவருடைய வீட்டிலிருக்க கமலாவிற்குப் பிரியமே யாயினும், கனகாம்புஜம் தன் பிள்ளை யின் மீது வைத்திருக்கும் வாஞ்சை யால் தனக்கேதாவது இன்னல் விளை விப்பாளெனப் பயந்தாள். ஏனெனில், அவளுடைய பிள்ளையாகிய பலராமன் படிப்பு வாசனை யற்றவனாகையாலும், அதிக துஷ்டனாகையினாலும் அவன் ஏதாவது சேஷ்டை செய்வானென அஞ்சினாள். வேறு வழியில்லாமை யால் கடவுள் செயலின்படி நடப்பன நடக்கட்டும் என்று அவ ருடன் போகத் தீர்மானித்திருந் தாள். ஃ

மறுநாட் காலை கோவிந்த முதலி யார் கமலாவைச் சார்ந்த சாமான்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு அவளை வரும்படி யழைத்தார். அச்சமயம் கண்ணப்பனும் அங்கிருந்தான். கமலா கண்களில் நீர் ததும்பியபடியே கண்ணப்பனை நோக்கி நான் போய் வருகிறேன், எனக்கு விடை கொடு; இனிஉன்னை எப்போது பார்ப்பேனே கடவுளுக்குத்தான் தெரியும் என்றாள். அவன் அவளை சமாதானப்படுத்தி நீ வருத்த மடையாதே; பௌரிங்கி பேட்டையில் தானே யிருக்கப் போகி றாய்; சாரதா விலாசத்தை விட்டு வேறு ஒரு வீட்டில் வசிக்கப்போகி றாய். நான் சமயம் நேரிட்டபோது உன்னை வந்து சந்திக்கிறேன். என் வேலைக்காரனை அடிக்கடி அனுப்பு கிறேன். அவனிடம் ஏதாவது விசேஷ மிருந்தால் சொல்லி யனுப்பு. நீ அதிகமாக விசன மடையாதே. இதோ இதை வாங்கிக்கொள் என்று ஒரு நூறு ரூபாய் நோட்டைக்கொடுத் தான். அவள் அதைப் பத்திரமாக வைத்துக்கொண்டு வண்டியி லேறி னாள். கனகாம்புஜமும் கோவிந்தரும் கண்ணப்பனைத் தங்கள் வீட்டிற்கு அடிக்கடி வந்துபோகும்படி கூறி அவ னிடம் விடைபெற்று வண்டியிலேறிச் சென்றார்கள். ஃ

வீடு சேர்ந்ததும் கனகாம்புஜம் கமலாவிற்கு ஓரறையைக் காட்டி இத னுள்ளேயிருக்கும் பெட்டியில் உன் சாமான்களை யெல்லாம் வைத்துக் கொள். உன் தந்தையிறந்து விட்டா ரென்று நீ விசனமடைய வேண்டாம். நானுள்ள வரையில் உனக்கென்ன கவலை? நீ இவ்வீட்டு எஜமானிபோல் சுகமாயிரு என்றாள். இவள் கூறும் வார்த்தையில் கமலாவிற்கு கிஞ்சிற் றேனும் நம்பிக்கையில்லை யாதலால் அவள் இவளுக்குக் கோப முண்டாக் காதபடி பக்குவமாகவே நடந்து வந் தாள். கனகாம்புஜம் சிற்சில சமயங் களில் கமலாவிடத்தில் பலராமனை மணந்துக்கொள்ளும்படி குறிப்பாகக் கூறுவாள். இவளுடைய எண் ணத்தை யறிந்த கமலா ஒன்று மறி யாதவள் போல் காலத்தைக் கழித் தாள். பலராமன் இவளுடன் சதா வீண் கதைகள் பேச வருவதுமன்றி இவளுக்காக அதிகபாடுபடுபவன்போல் பாசாங்கு செய்வான். கமலா இவ னுடன் பேச மனமில்லாமலும், இவன் விஷயத்தில் தலையிடாமலு மிருந் தாள். இவன் விஷயமாகக் கனகாம் புஜம் கூறும் வார்த்தைகளைக் கமலா கவனிப்பதே யில்லை. இவளுடைய மௌனத்தை யுணர்ந்த கனகாம்புஜம், சீக்கிரத்திலேயே கமலாவைப் பலராம னுக்கு மணஞ்செய்து விடவேண்டு மென்று தீர்மானித்துக் கொண்டு

---

நம் சிறுவர்கள் தம் வாழ்க்கையை ஓர் உயர் நோக்கத்துடன் நடத்த வேண்டும். ஒருவித யோசனையு மில்லாமல் காலத்தை விருதாவாக்கக் கூடாது. பால்ய முதல் மதவுணர்ச்சியிற் பெருகி நிற்கவேண்டும்.

அதைக் கோவிந்தருக்குத் தெரிவித்தான். அவர் இசற்குக் கிஞ்சிற்றேனும் சம்மதப்படாமல், குற்றமற்ற இளங் கன்னியை அந்த மூதேவி முண்டத்திற்கா கொடுப்பது? அவன் நம்முடைய பிள்ளையாயிருந்தால் மாத்திரமென்ன? ஓர் பெண்ணின் வாழ்நாளைக் கெடுப்பது பாவமல்லவா, என்ருர். இவருக்கு எவ்வளவோ சமாதானம் கனகாம்புஜம் கூறியபோதிலும் இவர் இடந்தரவேயில்லை. ஆயினும் கனகாம்புஜம் தன் எண்ணத்தை நிறைவேற்றி விடவேண்டுமெனக் கருதி கமலாவிற்குத் தெரிவித்தாள். அவள் மும்மூர்த்திகள் வந்தாலும் அக்காரியம் முடியாது என்று தயை தாட்சண்யமின்றி வெளிப்படையாகக் கூறிவிட்டாள். இதைக் கேட்டதும் கனகாம்புஜத்திற்குக் கோபம் பொங்கி வடிந்தது, அவள் கமலாவை நோக்கி "திக்கற்ற அனுதைப் பெண்ணுகிய நீ, அழகாயும் சிவப்பாயும் இருந்தால் மாத்திரம் போதுமா, உன்னிடம் ஒருகாசு கூட இல்லை, பிச்சைக்காரியைவிடக்கேடுகெட்டவளாயிருக்கிருய், உனக்கிவ்வளவு கர்வமா........." என்று கண்டபடி திட்டினுள். கமலா வாய்திறவாமல் தன் காலவித்தியாசத்தை நினைத்து விசனமடைந்திருந்தாள். அன்றைய தினமுதல் கனகாம்புஜம் கமலாவை சாக்குபோக்காக சதா திட்டியபடியேயிருந்தாள். அவளைக் கண்டால் பாம்பைக் கண்டசீரிபோல் சீறுவாள். அவள் முகத்தை ஏரெடுத்துப் பாராள். அவள் திட்டியவற்றையெல்லாம் விவரமாகயெழுதினுல் முப்பத்திரண்டு அத்தியாயம் வரும். இவ்வாறு வேலைக்காரர்களின் முன்னிலையில் மிகவும் செல்வாக்குடனிருந்த தன்னைத் திட்டுவதை நினைக்குந்தோறும் கமலாவினுடைய மனம் புண்ணுகி விடும். என் செய்வாள் பாவம். மாற்ருந்தாய் வசமகப்பட்ட மக்கள்போல் மௌனமாக சகித்திருந்தாள். ஒருநாள் கமலாவின்மீது ஏதோ குற்றம சாட்டி கனகாம்புஜம் அவளுடைய தாடையிலும் முதுகிலு மடித்தாள். இதற்கு முன் எப்போதும் அடிபட்டிராதவளாகையால் அவள் சிறு குழவிபோல் வீறிட்டழுது துவண்டு தரையில் வீழ்ந்தாள். கனகாம்புஜம் அவளைக் காலால் எட்டி யுதைத்துத் தள்ளினுள். கமலா பிணம்போல் சற்றுநேரம் பூமியிற் கிடந்து பிறகு தன்னறைக்குச் சென்று கண்ணீர் விட்டழுது இனி ஒரு கணமேனும் இங்கிருக்கலாகாது, எங்கு தான் செல்லலாம், ஐயோ கிணற்றில் வீழ்ந்தபோது யாரும் எடுக்காமலிருந்தால் இறந்து சுகமடைந்திருப்பேனே. இப்போது இந்த அல்லல்பட நேர்ந்ததே. தந்தைக்கு வந்த இயமன் எனக்கும் வரலாகாதா, கண்ணப்பனிடம் சென்ருவது பிழைக்கலாமா என்று யோசித்துக்கொண்டே அன்றைய தினமெல்லாம் உணவின்றிக் கழித்தாள்

ஃ

மறுநாள் காலை தள்ளாடியபடியே யெழுந்து உட்கார்ந்துக் கொண்டிருந்தாள். அச்சமயம் வேலைக்காரி ஓடி வந்து "தாயே நீ என் விசனப்படுகிருய்? உன் காலம் அப்படியாய் விட்டது. எங்கள் எஜமானி மகா கொடியவள். அவள் உன்னைப் படுத்தும்பாடு எங்கள் வயிறு எரிகின்றது. அவள் என்ன செய்த போதிலும் நீ பலாமனை மணக்காதே. அவன் பரம துஷ்டன். இப்போது அம்மா வெளியே

---

உயர்ந்த சிந்தனையுடன் ஆடம்பரமற்ற வாழ்க்கையையும் கற்றுக் கொள்ள வேண்டும். பாமர ஜனங்களுக்காகச் சிந்தனு சக்தியைச் செலவிடுவதாகக் கூறிக் கொள்ளும் நம்மில் சிலரும் (வீண் செலவான) உயர்ந்த வாழ்க்கையைத் தேடிச் சென்ருல் நாம் உயர்ந்த சிந்தனையை இழக்கநேரிடும்.—மகாத்மாஜி.

கடைக்குப் போயிருக்கிறார்கள். நீ நேற்றிரவு ஆகாரம் கொள்ளவில்லை யாகையால் உடனே எழுந்து பல் துலக்கிக்கொண்டு கொஞ்சம் காப்பி பலகாரம் சாப்பிடு" என்றாள். கமலா எழுந்து பல்லைத் துலக்கிக்கொண்டு காப்பி சாப்பிட்டுவிட்டு நாற்காலியி லுட்கார்ந்து மேசைமீது சாய்ந்தபடியே யிருக்கையில் வேலைக்காரி யோடி வந்து உங்களைக் காண்பதற்கு யாரோ ஒருவா வந்திருக்கிறார் என்றாள். யாராயிருக்கக் கூடும் என்று கமலா வேகமாய் ஓடிப்போய்ப் பார்க்கையில் கண்ணப்பனைக் கண்டு தனக்குண்டாயிருந்த துக்கத்தை மறந்து ஆனந்தமடைந்தாள். இவளுடைய தேகம் வாடியிருப்பதையும், இவளுடைய அழகு குன்றியிருப்பதையும், கண்கள் சிவந்திருப்பதையம் கண்டு கண்ணப்பன் ஆச்சரிய மடைந்தான்.

கமலா அவனை யழைத்துக் கொண்டு தன்னறைக்குச் சென்றாள்.

கண்ணப்பன் :—உனக்கு இவ்விடத்தியசுகமெப்படி யிருக்கிறது......

கமலா :—சாரதா விலாசத்திலனுபவித்த சுகம் எந்த ஜென்மத்திலும் வராது என்று சொல்லிக்கொண்டேயிருக்கையில், வேலைக்காரி யோடி வந்து கமலா எவ்வளவு தடுத்தும் கேளாமல் கனகாம்புஜம் கமலாவிற்கு விளைவித்த கஷ்டத்தை யெல்லாம் கண்ணப்பனிடம் கூறிவிட்டாள். இதைக் கேட்டதும்,

கண்ணப்பன்:— விசனத்துடன், கமலா உன்னை அடித்தார்களா? உண்மையைச் சொல் என்று ஆத்திரத்துடன் கேட்டான்.

கமலவல்லி :—அடித்தா லென்ன செய்கிறது? உதைத்தா லென்ன செய்கிறது? என் கர்மத்தை நான் அனுபவிக்கிறேன் கஷ்டகாலத்தில் பந்துக்களின் வீட்டிற்குச் செல்வதைவிடப் பிச்சையே யெடுத்துண்டு வாழ்வது மேல். பணமுள்ள வரையுமே பந்துக்கள். உண்டானபோது தான் கோடானுகோடி உறவின் முறையார். நான் அப்பொழுதே சிவிவாசச் சிற்றப்பாவின் வீட்டிற்குப் போயிருந்தால் கௌரவமாக இருந்திருக்கும். ஆனால், அவருடைய பெண் கிருஷ்ணவேணி உங்களை மணந்து கொள்ளவேண்டுமென்று வெகுநாளாய் எண்ணமிட்டுக் கொண்டிருப்பது எனக்குத் தெரியும். உங்களையே மணக்கப் போவதாக நேரில் என்னிடம் ஒரு தடவை சொல்லி யிருக்கிறாள். அவளுக்குப் போட்டியாக நான் ஏற்பட்டிருப்பதை அவள் அறிவாளானால் என்னைக் கோபித்து அவமதிப்பாள். அதற்காகவே அங்கு நான் செல்லாமல் இங்கு வந்தது. இங்கும் பலராமன் எனக்கு சனியனாக ஏற்பட்டான்.

கண்ணப்பன் :—நடந்து போன விஷயத்தை ஏன் நினைக்கிறாய்? உன் தந்தை எனக்கு எழுதிக் கொடுத்துள்ள சாரதா விலாஸ விக்கிரய பத்திரம் இதோ இருக்கிறது. அதில் உன்னை நான் மணந்து கொள்ள வேண்டுமென்ற கண்டிதமான நிபந்தனையும் கூறப்பட்டிருக்கிறது. நான் உனக்கு சாரதா விலாஸத்தைத் தானமாக எழுதிவைத்துவிட்ட பத்திரமும் இதோ இருக்கிறது. அது எப்பொழுதும் என் சட்டைப் பையிலேயே இருந்தது நல்லதாயிற்று. இவ்விரு பத்திரங்களையும் கோவிந்த முதலியாரிடம் காண்பித்து விவாகத்திற்கு ஏற்பாடு செய்துகொண்டு, இப்பொழுதே உன்னை சாரதா விலாஸத்திற்கு அழைத்துச் சென்று விடுகிறேன். உன் சம்மதம் என்ன?

கமலவல்லி :—அப்படியே செய்யுங்கள். என் பொன்னுன அத்தையின் வீட்டில் இனி அரை நிமிஷமும்

இருக்க மாட்டேன். கிருஷ்ணவேணியின் வீட்டிற்கும் நான் போக முடியாது.

கண்ணப்பன் மெத்தைக்குச் சென்று கோவிந்த முதலியாரைக் கண்டான். அவர் அவனை அதிக மரியாதை செய்து உட்கார வைத்தார். அவரிடம் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்து, பிறகு கமலாவின் விவாக விஷயத்தைப் பிரஸ்தாபித்து, சபாபதி முதலியாரின் எண்ணங்களைத் தெரிவித்து தன்னிட மிருந்த பத்திரங்கள் இரண்டையும் காண்பித்தான். அவற்றைக் கோவிந்த முதலியார் பார்த்து, எல்லா ஏற்பாடுகளையும் சபாபதி முதலியார் முன்னதாகவே முடிவு செய்து வைத்திருப்பதைக் கண்டு வியப்புற்று விவாகத்திற்கு உடனே சம்மதித்தார். கண்ணப்பன் இப்பொழுதே கமலவல்லியைத் தான் அழைத்துச் செல்வதாகவும், இந்த விவாக விஷயம் தெரிந்த பின்பு கனகாம்புஜம் அம்மாள் கமலவல்லியிடம் முன்போல் பிரியத்தைக் காட்ட முடியாதென்றும் கூறினன். தன் மனைவியின் குணங்களை யறிந்திருந்த கோவிந்தர் அவ்விதமே அழைத்துச் செல்வதற்கும் இசைந்து கண்ணப்பனுடன் மெத்தையிலிருந்தும் கீழே இறங்கி வந்தார்.

அப்பொழுதுதான் கனகாம்புஜம் கடையிலிருந்தும் திரும்பி வீட்டிற்குள் நுழைந்தாள். அவளிடம் கண்ணப்பனுடைய அபிப்பிராயத்தைக் கூறினர்.

கனகாம்புஜம் :—செத்துச் சுடுகாடு போனபாவி எல்லா ஏற்பாடுகளையும் பத்திரங்களின் மூலமாகவே செய்து வைத்து விட்டானு? இதுவரையில் இந்த சங்கதியே யாருக்கும் தெரியாதே. கிருஷ்ணவேணியையல்லவோ கண்ணப்பனுக்குக் கொடுப்பதாகப் பேசிக் கொண்டார்கள். இந்தப் படுநீலி கமலா அவளுக்குப் போட்டியாக ஏற்பட்டாளா? பலராமனுக்குத் தருவதாக சிறுவயதிலிருந்தும் அந்த செத்துப்போனபாவி சொல்லி வந்து இப்படி ஏமாற்றினுனே? இவள் வாழ்வதை நானும் பார்க்கத் தான் போகிறேன்.

கோவிந்தர்:—இறந்துபோனஉத்தமரைப்பற்றி ஏன் தூஷிக்கிறாய்? பாற்கடலிலே அமிர்தத்துடன் விஷமும் பிறந்ததுபோல துஷ்டையாகிய நீ அவருக்குத் தங்கையாக வந்தாய். பலராமன் உன் துர்க்குணங்களெல்லாம் ஓர் உருவாய்த்திரண்டு தோன்றுவதானுன். என்னுடைய நற்குணங்களில் கடுகளவு கூட அவனிடம் காணமுடியாதபோது சபாபதி முதலியார் தங்கவிக்கிரகமான தன் பெண்ணை அவனுக்கு எப்படிக் கொடுக்க ஒப்புவார்? முதலில் நானே அதற்கு சம்மதிக்கமாட்டேனே. என்னவோ என் தலையெழுத்து, மூர்க்கப் பிசாசாகிய உன்னைக் கட்டிக்கொண்டு அழுகிறேன். ஆயினும் நான் உன்னிடத்தில் ஏமாறவில்லை. உன் வார்த்தைகளிலும் மயங்குவதில்லை. உன்னை ஒரு கண்டிப்பான கட்டுத் திட்டத்திலேயே வைத்து இதுவரை அடக்கி வருகிறேன். தெரிந்ததா?

கனகாம்புஜம் :—(கடூரமான முகத்துடன்) சரி, சரி, கண்ணப்பரின் இஷ்டப்படியே அந்த சனியனை அவரே கட்டிக்கொண்டு அழட்டும். அந்தப் பீடை இங்கே இருக்கவேண்டாம். இப்பொழுதே இந்த நிமிஷமே இந்த வீட்டை விட்டுத் தொலையட்டும். அவள் இருந்த அறையையும் சாணியால் மெழுகிச் சுத்தம் செய்துவிடுகிறேன். அவள் தாலியறுத்துச் சந்தியிலே போகட்டும் என்றாள்.

(தொடரும்.)

# குடும்ப விநோதக் குறள்.

2. பொறாமை யுள்ளம்.

1. கருங்குரங்கு போலவே காட்டும்; பொறாமை
இருப்பவர்தம் இன்பமுக மே.

2. வெறிகொண்ட நாயெனவே வீறிடுவர்; நெஞ்சில்
பொறாமையெனும் பேயெழுந்த போது.

3. குடும்பங்கெடுவதற்குக் குண்டுணிகள் வேண்டாம்
கடும்பொறாமை யொன்றிருந்தக் கால்.

4. சிடுசிடுப்பும் சீரழிவும் சீக்கிரத்தில் சேர்க்கும்
கடுகடுக்கச் செய்பொறாமை காண்.

5. புகையும்பொ றாமைநெஞ்சில் போற்றுமுற (வு) [உண்டோ
பகையே விளைந்துவிடும் பார்.

6. மனதைப்பா ழாக்கும் மகிழ்ச்சியைமண் ணாக்கும்
சினமேறியச் செய்பொறாமை யே.

7. கள்ள நினைவையே காட்டும்பொ றாமைக்குணம்
உள்ளுருக்கி நோயெனவே ஓது.

8. தேவாங்கு போலவே தேகம் இளைத்துவிடும்
பாவம் பொறாமையில் பட்டு.

9. இன்பமெனுங்கோட்டை இடிந்துவிழச்செய்துவிடும்
துன்பப் பொறாமையெனச் சொல்.

10. தான்சாக நஞ்சினைத் தானே குடிப்பது போல்
மாண்டிடுவார் கொல்பொறாமை யால்.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

*செல்வவானாக இருந்தபோது தர்மத்திற்கென்று சில ஆயிரம் தொகைகளுக்குக் கையொப்பமிட்டது ஒருகாலம். பிறகு வரவு சுருங்கி வறுமையிலாழ்ந்து அத்தொகைகளைக் கொடுக்காமற்போக, அதற்காக வாரண்டும் ஜப்தியும் வந்து தனது சொத்துக்கள் ஏலம் போடப்பட்டு அந்தத்தொகை வசூலிக்கப்படுவதும் ஒருகாலம். தர்மத்திற்கென்று பிறந்த தயாளகுணம் தன்னை மிக அவமானப்படுத்தி நஷ்டமுறச் செய்வதற்கும், தனக்குப் பட்டைநாமம் பிறர் போடுவதற்கும் ஒரு கருவியாகப் பின்னாட்களில் அமைந்து விடுகிறது.*




1. வீட்டுக்காரனின் மன வேதனை:—அற்ப விஷயத்தினின்று பெரிய கலக முண்டாக, அதனுல் வீட்டில் அடுப்புகூட மூட்டப்படாமல் போக, பிரியமான விருந்தினரும் அப் போதே வந்து நுழைய, வீட்டுக்காரன் படும்பாடு, ஆ! ஆண்டவனுக்கே தெரி யும்.

2. தற்கால நாகரீக கோலம்:—தலைமயிரை கிராப் செய்திருக்கும் பலர் தலையை வகுப்பெடுத்து சீவ வேண்டி, மயிர்களில் ஈரமிருந்தால் தான் மயிர் படியுமென்ற எண்ணத் தை மனதிற் கொண்டு தண்ணீரைத் தடவி சீவுகிறார்கள். சிலர் எண்ணை தண்ணீர் இரண்டும் கலந்து ஒன்றாய்த் தேய்த்துத் தலை சீவுகிறார்கள். இந்த நாகரீக கோலத்தை அனுசரிப்பதால் கெடுதல் நேரிடுமென்பது அவர்கள் மனதில் படுவதில்லை.

3. அலங்காரப் பெண்மணிகள்:- உடல் தெரிய உடை யணிந்து, பல விகாரங்களாக வெட்டி வளைத்துத் திருத்தி முருக்கி வித்தியாசமாகச் சின்னபின்னப்படுத்திய தலைமயிரை சீவி மினுக்கி, கையில் 'வாக்கிங் ஸ்டிக்' பிடித்துத் தலை நிமிர்ந்து ஒய்யாரநடை நடந்து எதிரே வரும் பெரியாரைக் கண்டால் மரியாதை செய்யாமல் எந்த ஆடவரோடும் கூசாமல் வார்த்தையாடி நாணம் எனபதையே மறந்தது போல எங்கும்சஞ்சரிக்கிறார்கள். இவர் களைக் கற்பு லக்ஷண உத்தமிகள் என்று கூறலாமா ?

4. மனைவியின் மூடத்தனம்:— வெயிலில் வேலை செய்து வாடிக் களைத்து ஏங்கிப் பசியுடன் வீட்டிற்கு வந்து "சோறு போடு" என்று 'ஐயா' சொல்ல, "இவ்வளவு நேரம் என்ன செய்தீர்கள்?" என்று 'அம்மா' முகத் தை சுளித்து சுள்ளென்று சீறி விழ, பசிக் கொடுமையில் 'ஐயா' பதிலுக்குப் பதில் சீற, இறுதியில் வார்த்தை வளர்ந்து அடிதடி சண்டையாக மாற, வீடு அல்லோல கல்லோலப்படுகிறது. அண்டை அயலாரும் மடமடவென்று உள்ளே நுழைந்து வேடிக்கைப் பார்க் கிறார்கள். புசிப்பும் தவறுகிறது.

5. நூதன விவேகிகள் :—ஒன் றுமே தெரியாத விஷயங்களில், தவ றான அபிப்பிராயங்களை உயர்ந்த அபிப் பிராயங்களாகக் கூறுவதும், உயர்ந்த பத்திரிகைகளையும், நூல்களையும்பார்த் தால் "இது பாட்டிக் கதை; இதில் என்ன இருக்கிறது" என்று இகழ்ந்து ரைப்பதும், 'மட்டிகள்' எழுதும் ஆபாச விஷயங்களைக் கண்டதும் "ஆகா! அருமை! அருமை!!" என்று புகழ்ந்துரைப்பதும் சிலாது வழக்கம். இப்படிக் கூறுவதில் ஏதோ கௌர வம் இருப்பதாக இந்த நூதன விவேகி கள் கருதுகிறார்கள் போலும்!

6. போடி கோடாதவன் புழத் துச் சாவான் :—சிலர் விலை கொடுத்

---

நம்முள் எவர் மனதிலும் துவேஷம், சகிப்பின்மை போன்ற கெட்ட குணங்களிருக்க இடமளிக்கக் கூடாது. பிறரைச் சகோதரர் என்ற வாஞ்சை யுடன் பழகும் குணம் வாய்ந்திருக்கவேண்டும். அன்பின் மூலம் ஜெயிக்க முடியாத இடையூறு எதுவுமேயில்லை.

துப்பொடிவாங்கிஉபயோகிப்பதில்லை. நண்பர்களை சந்திக்கும்போது மாத்திரம் வாங்கிப் போட்டுக் கொள்ளலாமென்ற விரதத்தை விடாமல் அநுஷ்டித்து வருகிறார்கள். "காசுகொடுத்து வாங்கிப் போடக் கூடாதா? இப்படி எத்தனை நாளைக்குநடக்கப்போகிறது" என்று அவமதித்துக்கூறினால், "பொடிகொடாதவன் புழுத்துச் சாவான்" என்று பதிலுரைக்கின்றனர். "போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில் தூற்றினுந்தூற்றுவர்" என்பது இந்த உத்தமர்களுக்கே பொருந்தும்.

7. ஆடவரின் விஷமத்தனம் :—தெருவூடே பெண்கள் சென்றால், அப்போது அவ்வீதியிலிருக்கும் ஆடவரிற் பெரும்பாலோர் அவர்களைக் கெட்ட பார்வையுடன் பார்க்கின்றனர். சிலர் பரிகாச வார்த்தையாடி நகைக்கிறார்கள். தம் மனைவியர்—சகோதரிகள் வீதியிற் செல்கையில் பிறர் அவ்வாறு பார்க்கின்—பரிகவிப்பின்—நகைப்பின்—தம் மனம் எவ்வாறிருக்கு மென்பதைச் சற்றும் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

8. வலியவந்த சனியன் :—ஸந்தோஷப்படுவதற்கும் வீட்டுக்கோர் துணைக்குமாகக் கலியாணம் செய்யப்போக, வந்த புதியவளோ அடங்காப் பிடாரியாய் மடிபிடித்துச் சண்டை செய்பவளாய், கழுத்துக்கே கத்தியாய் விளங்க, ஸந்தோஷ மென்பது சஞ்சலமாகவும், வீட்டின் துணைக்கு என்பதுவீட்டையேசுட்டெரிக்குநெருப்பாகவும் மாறிப் போக, அவன் சனியனை விலைகொடுத்து வாங்கினேமேயென்று அங்கலாய்க்கிறான்.

9. ஒரு பெண்ணின் பிரலாபம்:—"கலியாணமாகுமுன் அவன்என்னிடம்காட்டியபிரேமையும், ஆசையும், காதலும் இப்பொழுது எங்கேயோ மறைந்தன. அவன்சொன்ன ஆசைவார்த்தைகளை நம்பி மோசம்போயினேன். உலகத்திலிருக்கும்சூதுவஞ்சனைகளை முதலில் அறியாத பேதையானேன். இப்போது நான் பட்டு நொந்து பெற்றிருக்கும் ஞானம் என் போன்ற பெண்களுக்கு எச்சரிக்கை செய்ய என்னைத் தூண்டுகின்றது. பொதுவாகவே ஆடவர் கபடம் நிறைந்த நெஞ்சினர். தேனொழுகப் பேசி, அறியாப் பெண்களை மோசம் செய்யும் பாதகர். அவர்கள் குணங்களை அறியாமல் அவர்கள் பேச்சில் மயங்கி மணந்து கொள்ளும் பெண்கள் இறுதியில் நடுச் சந்தியில் நிற்க வேண்டியதே" என்கிறாள் ஒருவனை நம்பி ஏமாறிய பெண்.

10. தூரத்தில் விலகி இருந்தால் அன்பின் வேகம்—சக்தி அதிகரிக்கின்றது. சமீபத்தில் இருந்தால் அதன் வேகம் தளர்ந்து சலிப்பு தோன்றிக் கொள்கின்றது; 'சொட்டு' வார்த்தைகளும்புறப்படுகின்றன. சீக்கிரம் அங்கிருந்து புறப்பட்டுவிடும்படி மனமும் தூண்டுகிறது.

11. நல்ல புஸ்தகங்கள் படிக்கப் படிக்க எவ்வளவோ பிரியமாயிருக்கின்றன. அவைகளைப்படிக்கும்போது பசி தெரியவில்லை; பொழுது போவதும் தெரியவில்லை. ஆகார நித்திரைகளில் அபேக்ஷையுமில்லை. மனவருத்தங்களெல்லாம் அறவே நீங்கிவிடுகின்றன. வலிய வருகிற தூக்கத்தைச் சமாளித்தும், பல அவசர வேலைகளை நிறுத்திவிட்டும் படிக்கும்படியாகிறது. புஸ்தகங்களே உற்றசிநேகிதர்கள்.

த. சு. சங்கரலிங்கம்.

---

ஒரு சங்கதியில் ஒருவனுக்கு உதவி செய்கிறவர்கள் மற்றொரு சங்கதியில் அவ்வளவு சிரத்தையின்றி மௌனமாய் விடுகிறார்கள். அது ஒருவேளை, இது ஒருவேளை போலும்!

## II

12. இறைவன் செயல் :—சகிக்கொணுத துன்பமுற்றகாலத்து அதைச் சகித்துக் கொள்ளும்படியாய் ஓர் மகிழ்ச்சியை இடையே புகுத்திவிடுகிருர். அவசியமான செல்வு வந்தகாலத்து ஒருவரிடம் பல்லைக் காட்டி நிற்காமல், ஒரு வரவைக் காண்பித்து விடுகிருர்.

13. காதலர் பிரிவு :—காதலர் பிரிந்து பின் கூடுங்காலத்து அது சரியான பசி வேளையில் கிடைத்த உணவுபோல் ருசிக்கிறது.

14. அறியாமையும் வஞ்சகமும்:- தன்னை நம்பிய இல்லாளைப் பறக்க விட்டுப் பரத்தையரை நாடிக் கலங்குவோரும், தன் கணவனை விட்டு, நய வஞ்சகரை நம்பியோடித் திண்டாடிய பெண்களும் தங்கள் அறியாமையால் தங்களுக்கே நாசத்தை விளைத்துக் கொண்டோராவார்கள். ஆனல், வெளிக்கு உத்தமனுக நடித்துப் பல பெண்களின் கற்புக்கு வலையிட்டுத் திரியும் ஆடவரும், அத்தன்மையான பெண்களும் கொடிய வஞ்சகராவார்கள்.

15. முன் நிதானம்:—தபால் கார்டில் கடிதம் எழுத ஆரம்பிக்கும் பொழுது எழுத வேண்டிய விஷயங்களை முதலிலேயே நிதானித்து ஆரம்பித்திருந்தால் இடம் சௌகரியமாய் இருக்கும். அன்றி முதலில் விரிவாய் ஆரம்பித்து விட்டு பின்னர் முக்கியமான விஷயம் எழுத இடமில்லாமல் திண்டாடநேரிடுகிறது. பண விஷயத்திலும் இங்கிதான மிருப்பின் பலவித கடன்களுக்கும் ஆளாகாமல் தப்பிக்கலாம்.

16. 'என்னுல் பிறருக்கு உதவி செய்ய முடியா விட்டாலும், யான் ஒருவருடைய உதவியை எதிர் பாராமலும் என்னைஒருவருக்கு சுமையாகக் காட்டிக் கொடாமலும் காப்பாய் இறைவனே !' என்பது ஓர் அறிஞரின் முக்கிய பிரார்த்தனையாம்.

எம். கே. பிள்ளை.

## III

சில பாட்டிகள்:—வயதிற் சிறியவர்களாயிருந்தாலும், சில பெண்கள் ஓர் குழந்தையைப் பெற்றவுடன் தங்களை அனுபவத்தில் மிகுந்த பாட்டிகளாகவே மதித்தும் பேசவும் நடக்கவும் ஆரம்பித்து விடுகிருர்கள்.

4. கொடுமை செய்யும் தாய்மார் :—சில தாய்மார்கள் தங்கள் பக்கத்திலுள்ளவர்களுக்குக் கெடுதல் நினைப்பது மன்றி தமது சொந்த புதல்வர்களுக்குக்கூடத் தீங்கு நினைக்கிருர்கள். தனது பெண்ணின் பேரிலுள்ள அன்பில் நூற்றில் ஒருபங்கு கூடத் தன் ஒரே பிள்ளையின் பேரிற்செலுத்த இஷ்டமில்லை என்ருள் ஓர் தாய். அம் மகன் அவளுக்கு என்ன கொடுமை செய்தானே தெரியவில்லை.

K. இராமாநுஜம்.

---

உலகத்தில் வெளி வேஷத்தைக்கண்டு ஸாது ஜனங்கள் மயங்கி ஏமாந்து போகின்றனர். ஒவ்வொருவருடைய குணத்தையும் தீரவிசாரித்தாலன்றி உண்மை தெரியுமா ? தெரியாதென்பதே விடை. படித்தவர்கள் என்பதினுலேயே உண்மை அன்பினராய் விடுவரா? பலபக்கங்கள் படிப்பின் திறமையால் எழுதிக் கடிதம் விடுத்திருப்பதினுலேயே அன்னேர் யதார்த்த அன்பினராய் விட முடியுமா ? உலக ஸ்வபாவமுணர்ந்தோர் இந்தப் பல பக்கக் கடிதங்களை மெய்யென்று நம்புவதேயில்லை.



எவ்வளவு கொடுத்திருந்தாலும் கடைசியில் ஒரு சங்கதியில் இல்லையென்ருல் எவர்களுக்கும் கோபம் உண்டாகி விடுவது சகஜம்தான்.




(269-ம் பக்கத் தொடர்ச்சி.)

705. How poor are they that have not patience !

SHAKESPEARE.

பொறுமையில்லாதவர்கள் எப்போதும் ஏழைகளாகவே இருப்பர்.

ஷேக்ஸ்பியர்.

706. Neither a borrower nor a lender be, For loan oft loses both itself and friend, And borrowing, dulls the edge of husbandry. SHAKESPEARE.

கடன் கொடுப்பவரும் வாங்கியவரும் ஆப்த நண்பர்களாயிருப்பினும் நாளாவர்த்தியில் நட்பை இழந்து விரோதத்தை யுண்டாக்கும். அத்துடன் கடன் வாங்கல் சிக்கனத்தையும் அழித்து விடும். ஷேக்ஸ்பியர்.

707. Nothing useless is, or low; Each thing in its place is best. LONGFELLOW.

உலகத்தில் உற்பத்தியாகும் வஸ்துக்களெல்லாம் அதனதன் இடத்தில் உபயோகமுள்ளவைகளாகவே யிருக்கும். எதுவும் பயனற்றதாய் உற்பத்தியாகவில்லை. லாங்பெல்லோ.

708. Bring in great logs and let them lie, To make a solid core of heart. Be cheerful.

TENNYSON.

பெரிய பெரிய உத்தரங்களைக் கொண்டு வந்து முட்டுக் கொடுத்தாலும், மனோ அமைதி அடைய முடியாது. ஆனால், எப்போதும் சந்தோஷமாயிருத்தல் மனோ அமைதியைக் கொடுக்கும். டெனிஸன்.

709. In real life...the serious and the comic, the sublime and the grotesque, the pathetic and the ludicrous, are mingled together. LONGFELLOW.

உலகத்தில் நன்மை தீமைகளும், துக்கமும் ஸந்தோஷமும், ஹாஸ்யமும் ஸஞ்சலமும் கலந்தே ஸஞ்சரிக்கின்றன. லாங்பெல்லோ.

710. If you can't get to be uncommon through going straight, you'll never get to do it through going crooked.

DICKENS.

நியாயமான வழிகளில் நடந்து ஒரு காரியத்தைச் சாதிக்கஇயலாவிட்டால், கோணலான வழியிற் சென்று அதை சாதிக்க முடியாது. டிக்கென்ஸ்.

711. Love is sunshine, hate is shadow, Life is checkered shade and sunshine; Rule by love. LONGFELLOW.

பிரியமோ சூரிய வெளிச்சம், வெறுப்போ இருட்டு. உயிரோ சூரிய

---

படித்தவர்கள் சேரும் கூட்டத்தின் ஸம்பாஷணைகள் மிருதுவாயும் சாந்தமாயும் இனிதாயும் உள்ளன. படியாதவர்களின் கூட்டத்திலோ பேரிரைச்சல் வெகு தூரம் கேட்கும்.

வெளிச்சமும் இருட்டும் கலந்தது. சூரிய வெளிச்சத்தின்முன் இருட்டு தலைகாட்டுமா? லாங்பெல்லோ.

712. Every action down to the drawing of a line or utterance of a syllable, is capable of a peculiar dignity in the manner of it. RUSKIN.

ஒவ்வொரு வார்த்தை உச்சரிப்பதிலும், ஒவ்வொரு நடத்தையும் கடினமாகவோ மிருதுவாகவோ உச்சரிக்கும் மாதிரியிலும், நடத்தும் விதத்திலும் வெவ்வேறு விதமான அர்த்தங்களும் தோற்றங்களும் கொடுக்கும். ரஸ்கின்.

713. Come what come may, Time and the hour runs through the roughest day. SHAKESPEARE.

என்ன வரட்டும்; என்ன போகட்டும், விவாகம் நடக்கட்டும்; வானம் இடிந்து விழட்டும், வினடிகளும், நிமிஷங்களும், மணிகளும் சென்ற வண்ணமே யிருக்கும். எவர்க்காகவும் ஒரு விநாடிகூட நிற்காது. ஷேக்ஸ்பியர்.

## அதைத்தான் சொல்வானேன்? வாய்தான் நோவானேன்?

ஒன்றைச் சொல்லப் போவதில் உன் பக்கத்தில் முற்றுமே நியாய மிருந்த போதிலுங்கூட, நீ சொல்வதைக் கேட்டதும் எதிர் மனுஷ்யனுக்கு அது சுரீர் என்று அவன் நெஞ்சைக் குத்துகிறது. நீ உண்மையையே எடுத்துரைத்த போதிலும், உண்மையாக நடந்து கொள்ளாத அந்தக் கபட ஹிருதயஸ்தனுக்கு அது ஆத்திரமாய்ப்படுகிறது. இதை நீ நினைத்துப் பார்க்கும் பொழுது அதைத்தான் ஏன் அவனிடம் சொல்லி வாய் நோவ, அதை அவன் ஒரு குற்றமாக ஏன் கருத என்று எண்ணிக்கொண்டு நீ சொல்லவந்ததை உடனே நிறுத்திக்கொண்டு மவுனமாகி விடுகிறாய். இவ்விதம் எல்லாக் காலங்களிலுமே மவுனமாகிப் பொறுமைப்பட மனிதனால் முடிகிறதில்லை யாதலால், ஒவ்வொரு சமயம், பிறரைப் பற்றிய குற்றங்களை அந்தப் பிறரிடமே எடுத்துக் சொல்லிக் காட்டிவிடும்படியும் வந்து விடுகிறது. அதைக் கேட்டதும் எதிர் மனுஷன் தன்னை வார்த்தைகளால் குத்தித் தொளைத்தவன் மீது ஆத்திரப் படுகிறான். சுடு மொழிகளையும் வழங்குகிறான். அதுகாலை ஏன் அவனை அப்படிக் கேட்டோம், அவன் தான் நம்மை ஏன் இப்படி சுடு மொழிகளால் ஏசவேண்டும்? என்று தனக்குத்தானே நொந்து கொண்டு சங்கடப் படுகிறான். இந்த அறிவு முன்பே இருந்தால் எதுவும் பேசாது தப்பியிருக்கலாம்.



# ஹாஸ்ய சஞ்சீவினி



கரும்பன் :—என்டா ஒருமாதிரி யாக யிருக்கிறாய் ?

துரும்பன் :—அவளே அடி என் றேன். அவள் கையிலிருந்த துடைப் பத்தால் என்னை அடித்து விட்டாள்.

கரும்பன்:— நீ அவளே அம்மா வென்றிருந்தால் அவளும் சும்மா யிருந்திருப்பாளல்லவா?

—•—

ஹரிஹரன்:—உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? யென்று அவர் கேட்ட தற்கு, ஆம் இரண்டு வயது ஆண் குழந்தை ஒன்று யிருக்கிறது என்று பதில் சொன்னாயே அது என்?

சிவராமன்:— கல்யாணம் ஆகி விட்டது என்று சொன்னால் அத்து டன் விடப்போகிறாரா? குழந்தைகள் எத்தனை? ஆணா பெண்ணா? எத்தனை வயதிருக்கும்? என்று இப்படி அடுக் கடுக்காய்க் கேள்வி போடுவாரென்று தெரிந்துதான் அப்படிச்சொன்னேன்.

—•—

முதலாளி:— என்னய்யா! அவர் தந்த 100 ரூபாயை 1000 ரூபாய் என்று கணக்கில் வரவு எழுதி யிருக் கிறீரே?

குமாஸ்தா:—100 ரூபாய் தான் வரவு எழுதினேன். ஒரு வேளை ஒரு (0) சைபர் அழிந்து விட்டால் 10 ரூபாய் ஆகிவிடுமென்று சந்தேகம் வந்தது. அதனால் ஒரு சைபர் அழிந் தால் இன்னொன்று உதவியாக யிருக் குமென்ற முன் யோசனையுடன் கூட ஒரு சைபர் போட்டிருக்கிறேன்.

சு. மு. சொக்கலிங்கம்.

தந்தை:— அடே நீ கிழவனான போதுங்கூட மறக்காமல், என் தகப் பனார் சொல்லிக்கொடுத்தாரென்று நினைக்கும்படி நன்றாகப் படி.

மகன்:—அப்படியானால் நீ செத் துப்போவாயா அப்பா?

—•—

குப்பு:—உன் கடன் கவலைக ளெல்லாம் தீர்ந்து விட்டதா?

சுப்பு:— எல்லா கடன்களுக்கும் ஒரு முழுக்காக ஆறு மாதம் சிறையி லிருந்து வந்துவிட்டேன்.

—•—

சந்திரன்:—அந்தப் பத்திராசிரியரின் குணம் எப்படி?

இந்திரன் :—அவர் மிக நல்லவரே. ஆனால் அவர் பேனா வெகு கெட்டது.

—•—

மனைவி :—அரிசி யெல்லாம் ஆய் விட்டது.

புருஷன் :—நான் இறந்து விட் டால் அரிசிக்கு என்ன செய்வாய்?

மனைவி :—அப்பொழுது உங்கள் பெட்டிச்சாவி என்னிடம் இருக்கு மல்லவா?

—•—

நண்பர் :—என் அவ்வளவு இருட் டில் போய் பொடி வாங்கி வந்தீர்?

பத்திராசிரியர் :—பொடி யில்லாத தினால் தூக்கத்தைக் கலைத்து விட்டு இரவில் எழுத முடியவில்லை யென் றும் என் மனம் என்மீது பழி சுமத் தக்கூடும். அந்தக் குறைச்சொல் என்

மீது படவேண்டாமென்று பொடி வாங்கி வந்து விட்டேன். இனி மனதிற்கே சலிப்பாகவோ, எழுதவதற்கு யோசனைகூடாமலோ, சற்று தூங்குவோம் என்று மனம் நினைத்தோ அதனுல் இரவு வேலை தடை படுவதாகில் அந்தக் குற்றம் மனதையே சேரும். மனம் என் மீது குற்றம் சாட்டாதிருக்கும்படி பார்த்துக்கொள்வது மட்டும் என் வேலை. பிறகு மனதின் பிரியம் போல நடக்கட்டும்.

---

தாயார்:—நீ அககாவின் ஊருக்குப் போனுல் அக்காயிடம் தான் படுத்துக் கொள்வேனென்று முறட்டுத்தனம் செய்யாதே. உனக்கு எங்கு படுக்கை போட்டார்களோ அங்கே படுத்துக் கொள்.

குமாரன்:—நான் அக்காயிடம் படுக்கவில்லை. அக்காவே என்னிடம் படுக்க வந்தால்— ?

---

மனைவி:—ரொட்டிக்காரன் வந்திருக்கிறுன். குழந்தை அழுகிறது.

புருஷன்:—இரவாய் விட்டதே. இன்னும் கூடவா செலவு?

---

சிவப்பாயி:—ஓ! கருப்பாயி, ஏன் இப்படி கருத்துக் கிடக்கிறுய்?

கருப்பாயி:—என் கருப்பு உன் மலடித்தனத்தைப் போல வமிச நாசமாய் அவ்வளவு பழிப்புள்ளதல்ல. தெரிந்துகொண்டாயா அம்மணி.

---

தங்கை:—அண்ணு! நீஎன்னை அடித்ததைத் தகப்பனுரிடம்சொன்னேன் அவர் உன் மூக்கைக் கிள்ளி எடுத்து விடுவதாகச் சொல்லியிருக்கிறுர். பத்திரமாயிரு. இனி என் பேச்சுக்கு வராதே.

அண்ணன்:—என் மூக்கை அப்பா கிள்ளிவிட்டால் உன் அண்ணுவுக்கு மூக்கில்லை யென்று உன்னைத்தான் எல்லோரும் கேவலப்படுத்திப் பழிப்பார்கள். அந்த அவமானம் உனக்கே யொழிய எனக்கு இல்லை.

---

சீனு:—நான் அந்தப் பத்திராதிபருக்கு எழுதிய கடிதத்திற்குப் பதிலே வரவில்லை.

நாணு:—அந்தக் கடிதத்திலேயே ஒரு வி.பி.அனுப்பும்படி நீ எழுதியிருந்தால், உடனே வெகு வணக்கமாகப் பதில் கிடைத்திருக்குமே.

---

அவர்:—உமக்கு அவர்கள் மீது உண்மையான அன்புஇருப்பின், அந்த ஊருக்குச் சென்றதும் முதலில் அவர்களைக் காண உமது கால்கள் ஓடியிருக்காதோ?

இவர்:—அன்பாவது, மண்ணுவது! எல்லாம் பரஸ்பரம் உபசாரத்துக்கு வைத்துக்கொண்ட பிரியமான பேச்சுகள் தான். அவர்களே என்னைக் காண வரவேண்டுமென்றும், நானே வலியப்போவது கௌரவக் குறைவென்றும் எண்ணினேன். எனக்கு மேல் அவர்கள் கௌரவம் காட்டி என்னிடம் வாராததால், பிறகு அவர்களிடம்நானே கடைசியில் போகும்படியாயிற்று.

---

தகப்பனுர்:—கடிதம் எழுதி விட்டாயா? அதைப் படி.

---

புயல் நின்றவுடன் சமுத்திரம் அமைதியடைந்து விடுகின்றதா? இல்லை. அவ்விதமே, ஒரு குடும்ப கலகம் அடங்கி விட்டதாக எப்படினும் அதனின்றும் தோன்றும் விளைவுகள் மிக்க விபரீதமாகியும் விடலாம்.

குமாரர்த்தி:— "அன்புள்ள சிரஞ்சீவி அத்தைக்கு அநேக ஆசீர்வாதம்***"

தகப்பனர்:—போதும் போதும், நீ கடிதம் எழுதுவதில் பெரிய பண்டிதை தான்.

---

ராமன்:—நீ அந்த பெரிய மனிதன் அருகே சென்று உட்கார, அவர் தூர தூரப் போய் எட்டி உட்கார்ந்தாரே— அது என்?

சுப்பன்:—அவர் தன் வாயிலுள்ள சாராய நாற்றம் தெரியாமலிருப்பதற்காக அப்படி எட்டிப் போனர் போலிருக்கிறது.

---

அவன்:—கண்ணே! நின்மீது காதலானேன்.

இவள்:—புண்ணே! உன்னை நம்பினல் நடுத்தெருவிலாவேன்.

அவன்:—கள்ள நடிப்பு
கனவிலும் இல்லே!
உள்ளக் கடினம்
உடையன் யான் அல்லேன்.

---

கணவன்:—இவ்வளவு காய்கறிகள் வாங்கிவந்தேனே, வாங்கி வந்த கூடையைக்கூட நீ பார்க்கவில்லேயே! ஏன் அவ்வளவு அலக்ஷியமோ?

மனேவி:—எனக்கா வாங்கி வந்தது? என் வயற்றிலேயா கொட்டிக் கொள்ளப்போகிறேன். நான் கேட்ட நகை செய்யக்காணும்! மகா காய்கறிகள் வாங்கி வந்தாச்சுதாம்!

---

## போய் சொல்லாமை.

அநேக வருஷங்கட்கு முன் இங்கிலண்டில் ஒரு ஏழை தன்னுடைய குமாரனே ஒரு கனவானுடைய கடையில் வேலேக்கு அமர்த்தி அவன் சம்பாதிக்கும் பொருளால் ஜீவித்து வந்தான். ஒருநாள் ஒரு பெரிய மனிதன் அக்கடைக்கு வந்து சில துணிகளே யெடுத்து அவற்றின் விலே என்ன வென, ஏழை வீட்டுப்பிள்ளே உண்மையான விலேயை அறிவித்தான். இதனல் வியாபாரிக்குக் கோபம் உண்டாகி அந்தப் பையனே வெளியே அனுப்பி விட்டான். சிறுவன் அழுது கொண்டிருக்கையில் அவனுடைய தந்தை எதிர்ப்பட்டு வியாபாரியிடம் வந்து சங்கதி அறிந்து, "ஐயா, என் பிள்ளேக்குப் பொய் சொல்லிப் பிழைக்கிற ஜீவனம் வேண்டாம்; அவன் உண்மை சொன்னல்போதும்" என்று கூறித் தன்னுடன் அழைத்துச் சென்றுன். இதை யறிந்த பெரிய மனிதர் அச்சிறுவனுக்குத் தாம் உத்தியோகம் செய்வித்து அவனே முன்னுக்குக்கொண்டு வந்தார். இது உண்மை, நடந்த விஸ்தாரமான சரித்திரம்.




## ஒரு பெரியாரின் மகிமை.



எங்களூரின் சமீபத்திலுள்ள திருப்பாலைக்குடியிலுள்ள பக்கிரி மஸ்த்தான் என்பவரின் சித்தை சிறிதாவது அறியாதார் வெகு சிலரே. மதுரை செந்தமிழ் பாஸ்கரன் பாடிய பாட்டுகளிலிருந்து இவரது சரித்திரம் சிறிது எனக்குத் தெரியவாலாயிற்று. இவர் சிறிது காலம் பள்ளியில் பயின்ற பின், படகுகளில் ஏறிச் சென்று கடலில் மீன் பிடித்து வந்தாராம். சிறுவயதிலிருந்தே இவருக்கு யாதொரு வித தொந்தரவுமில்லையாம். மயானத்தில் சென்று மூன்று வருடங்கள் தவசிலிருந்த பின்னர் இவருக்குத்தெய்வ கடாக்ஷம் உண்டாயிற்றாம். இவரது பெற்றோர்கள், இவர் பிறந்த ஊர் முதலியன தெரிய வாவில்லை. தற்பொழுது இவர் இராமநாத புரத்திற்கு சுமார் 13-மைல்களுக்கு அப்பாலுள்ள திருப்பாலைக்குடியில் வசித்துக் கொண்டிருக்கிறார். எனது நண்பரும் நானும் இவரது மகிமையைப்பற்றிக் கேள்வியுற்று அவரிருப்பிடத்தை அடைந்தோம். ஜனங்கள் வரிசையாய் நின்று கொண்டிருந்தார்கள். சுமார் 30-வயதுடையவர்போலத் தோன்றிய பக்கிரி மஸ்த்தான் ஒவ்வொருவரிடமும்வந்து எவரெவர்கள் என்ன என்ன வியாதியினால் வருந்துகிறார்கள் என்று தெளிவாக எடுத்துக் கூறி தீர்த்தத்தை மந்திரித்துக் கொடுத்து எத்தனை நாட்கள் அதைச் சாப்பிட வேண்டுமென்பதையும் சொல்லிவிடுகிறார். பிள்ளைப் பேறடைய விரும்பியவர்களுக்கு எலுமிச்சம் பழத்தை மந்திரித்துக் கொடுக்கிறார். தாங்கள் மந்திர ஜலத்தை அருந்தினதால்தான் தங்கள் வியாதிகள் நீங்கின எனப் பலர் உறுதியாய்க் கூறுகிறார்கள். ஒவ்வொருநாளும் பிணியாளர்களும், மற்றும் பலவித குறைகளையுடைய ஜனங்களும் திரள் திரளாகத் திருப்பாலைக்குடி செல்லுகின்றனராயினும், செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் தான் கூட்டம்அதிகம். மஸ்த்தான் தம்மிடம் வருபவர்களிடம் யாதொரு பிரதி பலனையும் எதிர்பார்ப்பதில்லை.

K. இராமாநுஜம்.

## II

## பசுக்களின் காதையறுத்தல்.

உத்தராயண ஆரம்பகாலமாகிய மகரசங்காந்தி தினத்திலும், அதற்கடுத்த கோப்பண்டிகை தினத்திலும் பசு, முதலியவற்றை வருத்தி வேலை

---

ஒரு சீசாவில் கொடிய நோய்களை உண்டு பண்ணக்கூடிய கிருமிகளை விட்டு அதில் கங்காஜலத்தை விட, உடனே அந்தக் கிருமிகள் இறந்து விட்டன என்றும், கங்காஜலத்திற்குக் கிருமிகளைக் கொல்லும் சக்தியிருக்கிறதென்றும் லண்டன் "மான்செஸ்டர் கார்டியன்" பத்திரிகையில் ஒருவர் எழுதியுள்ளார். 35-வருஷங்கட்கு முன்பு இவ்விதமே பரீக்ஷித்தறிந்ததாய் "ஞானதரிசனி" என்ற நூல் கூறுகிறது.

வாங்காமல் பரிவுடன் கழுவிப் பசியாறத்தீனியிட்டுப் பிரியமுடன் அவற்றைத் திரிய விட்டு இன்புறச் செய்கின்றோம். ஆனால், கோ பண்டிகை தினம் பட்டிக்குப் பொங்கல் வைத்து தெப்பக்குளம் கட்டிப் பூஜைசெய்யுங்கால் ஒன்றுமறியாத பசுக்கன்றுகளின் காதுகளை யறுத்து தெப்பக் குளத்தில் போடுகிறார்கள். இக் கொடிய செய்கையை கோக்களுக்கென்றே ஏற்படுத்திய அப்புண்ணியதினத்தில், அவையனைத்தும் இன்புறும் அத்தருணத்தில் ஏன் செய்கிறார்களென்று அங்குள்ள பெரியோர்களைப் பணிந்து கேட்க, அது பெரியோர்கள் நடத்தி வந்த பழய வழக்கமென்றும் அவ்வழக்கத்தை விடுவது கூடாதென்றும் அவ்விதம் செய்து வந்த காரணந் தெரியாதென்றும் சொன்னார்கள். இதன் ரகசியம் இன்னதென்று யான் தெரியவுமில்லை. சாஸ்திரீகமாகவுள்ள வழக்கமா? பெரியோர்கள் ஏதாவது காரணத்தைக் கொண்டு யுக்தியாக நடத்தி வந்த வழக்கமா? தொன்று தொட்டுள்ள குருட்டு வழக்கமா? என்பதைத் தங்கள் பத்திரிகை வாயிலாக வெளியிட வேண்டுகிறேன்.

K. B. மீனன்

கல்லாபுரம், போத்தனூர்.

## புதுப் பெண்ணுக்குப் பெரியோரின் சிக்ஷை.

வீட்டில் புதுக் குடித்தனம் செய்யவந்த புதுப் பெண்ணை மாமி நாத்தி முதலியவர்கள் கூட இருந்து அடக்கியாண்டு, அப்படி இப்படி நட என்று போதித்து, அவ்விதமே நடக்கச் செய்து, வீட்டுக்காரனிடம் பயபக்தி மரியாதையுடன் நிற்கும்படி பழக்கி ஒழுங்கு செய்தால் தான் அந்தப் பெண்ணும் ஒழுங்குபட்டுத் திருந்தி உயர்ந்து நற்குணமணியாதல் கூடும். இவ்விதமின்றி, வீட்டுப் பெரியோர் அவரவர்பாட்டில் விலகிக் கொள்ளப் புருஷனும் மனைவியுமாக வாழ முயல்வதில் மனைவி கணவனுக்கு அடங்கி நடக்கப் பிசகுவதுடன், தன் பெரியோர்கள் தன் மனைவியை அடக்கி நடத்தவேண்டிய கடமையைப் புருஷனே ஏற்றுக்கொண்டு அவளை அடக்கியாள முயல்வதில் அது அவ்வளவு சிலாக்கிய மில்லாமற் போவதுடன், சரிசமானமாகவும் மதிப்பற்றும் போகிறது. உத்தமிகளான பெண்கள் எங்கோ சிலராக, பெரும்பாலான பெண்கள் பெரியோர்களின் சிக்ஷையின்மையால் அடக்கமான குணத்தில் பழகத் தவறிக் கெட்டுவிடுகிறார்களென்பதும் உண்மையே.

அன்பும், தேச சேவையும், தியாக புத்தியுமே மனிதனுடைய கவனத்தைக் கவரவேண்டும். நாம் அடிமையாகப் பிறந்திருப்பினும், அடிமை நீங்கியே உயிரை விடுவது என்று பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும்.




1. தூக்குக்குப் பதிலாக பிரிட்டனில் விதிக்கும் பெரிய சிக்ஷை யாதெனில் தண்ணீரில் மூழ்கவைத்துச் சாவடிப்பதே. இதை மிக எளிய சிக்ஷை என்று கருதப்படுகிறது. இதைப் பொதுவாகப்பெண் சிறையாளருக்கே உபயோகப்படுத்தி வந்தனர். இங்கிலந்தில் இத்தகையசிக்ஷை கடைசியாக நடந்தது 1556-ல். ஸ்காத்லந்து தேசத்தில் 1685-ல்.

2. 21-வயது முதல் 30-வயது வரையிலுள்ள மனிதன் சாரசரி ஒரு வருடத்தில் 5½-நாள் தேக அசௌக்கியத்தில் படுக்கிறான். 30-40—வயது வரையிலுள்ளவர்கள் வருடமொன்றுக்கு ஏழு நாள் அசௌக்கியமடைகிறான். பத்து வருடங்களுக்கு மேலே வருட மொன்றுக்கு பதினேரு நாட்களை இழக்கிறான். 50—60-வரையிலுள்ளவர்கள் 20-நாட்களை தேக அசௌக்கியத்தில் இழக்கின்றனராம்.

3. சாண்ட்விக் தீவிலுள்ளவர்கள் பெண்களை அவர்களுடைய எடையால் மதிப்பிடுகிறார்களாம். சைன தேயத்தார் பெண்களுடைய கால்களை அவலக்ஷணப் படுத்துவதோடு பற்களை கருப்பாக்குகின்றனர். தென் சமுத்திர தீவிலுள்ள பெண்கள் தம் முகத்தில் மேக நிறமான பச்சையைக் குத்திக் கொள்வதோடு, மூக்குத்தியையும் போட்டுக்கொள்ள வேண்டுமாம். சில ஆபிரிக்கா தேசத்து இளவரசர்கள் தங்கள் மனைவிகளுடைய பற்களை ராவி விடுகின்றனராம்.

4. பசுபிக் மகா சமுத்திரத்திலுள்ள சண்டே தீவிலுள்ள மலை உலகத்திலுள்ள மலைகளில் மிகப் பெரியதாம். 5-மைல் ஆழமுள்ள தண்ணீரின் மேலே 2000 அடி உயரம் அம்மலை உயர்ந்திருக்கிறதாம். மொத்தத்தில் அம்மலையானது அடியிலிருந்து மேல்சிகரம் வரையில் 30,000 அடி உயரமுள்ளதாம்.

5. பெகின் 50-அடி உயரமும் 40-அடி கனமுமுள்ளசுவற்றால் சூழப்பட்டுள்ளதாம். சுவற்றால் சூழப்பட்ட அந்தப் பட்டணம் 16-மைல் சுற்றளவுள்ளதாம்.

6. சாதாரண வெறும் கண்ணுக்குத் தோற்றும் நட்சத்திரங்கள் 6000-த்தைவிட கொஞ்சமாம். தூரதரிசன யந்திர உதவியால் தெரிபவை 100,000,000.

7. 724,692 தொடர் வார்த்தைகள் பைபிலில் இருக்கின்றனவாம்.

8. கொளம்போ விநோதசாலையிலுள்ள ஆமையே உலகத்திலுள்ள ஆமைகளுள் மிகப்பெரியதாம். அது 665—ராத்தல் எடை உள்ளதாம். அதன் நீளம் 9-கெஜமாம்.

9. ஈஜிப்ட்டிலுள்ள கெய்டம் தேயத்தின் ஷெயிக் ராபி நாபீ (Sheik Rafai Nabee) யின் வயது 155. மூன்றும் ஜார்ஜ் இங்கிலாந்தில் அரசு புரிந்து கொண்டிருக்கும்போது 1811 ல் கைரோவின் மேல் படையெடுத்து வந்த மகம்மது அலியை அவனுக்குத் தெரியுமாம்.

---

மனத்தின்கண் அன்பின் பசையே யற்றுப்போய் வெளியில் மட்டும் புன்னகையுடன் குலாவுவதால் உலகினர் மகிழ்ந்து விடுவரா?

10. பாரீசிலுள்ள சாம்பஸ்எலிசீஸின் வடிக்கு மூலையில் கட்டப்பட்டுள்ள ஆர்க் டிட்ராயம்ப் (Arc de Triomphe) மிக்க அழகும், மிக விலையுயர்ந்ததுமான ஞாபகார்த்தமாகக் கட்டிய வளைவாம். முதல் நெபோலியனால் 1806-ளு த்தில் அதைக்கட்ட ஆரம்பிக்கப் பட்டதாம். லூயீ பிலிப்பி சிம்மாசனம் ஏறிய பின்பும் 1836ளு வரையில் அதைக்கட்டி முடிக்கவில்லையாம். அதைக்கட்ட 400,000 பவுன் செலவாயிற்றும். (7,000,000 ரூபாய்)

11. 2,300—சில்க் பூச்சுகளைக் கொன்றால்தான் ஒரு பவுண்டு சில்க் அகப்படு மென்று தீர்மானித் திருக்கிறார்கள்.

12. பார்லிமெண்டின் ஒவ்வொரு சட்டத்தின் இரண்டு காபிகள் பதனிட்டதோற்கடுதாசியில் அச்சிடப் படுகின்றனவாம். அவைகளுள் ஒன்று பார்லிமெண்டின் பட்டியில் சேர்த்து வைக்கப்படுமாம். மற்றொன்று ரிகார்ட் ஆபீசுக்குப் போய்விடுமாம்.

13. மிலானிலிருந்து இரண்டு மைலுக்கப்பால் உலகத்தில் ஏற்படாத அபூர்வமான எதிரொலி உண்டாகிறதாம். அது சிமோ மட்டாவின் கோட்டைக்கருகில் ஏற்படுகிறதாம். ஒரு துப்பாக்கி வெடி குண்டின் சப்தத்தை அது 60 தரம் எதிரொலிக்கிறதாம்.

14. ஸ்பெயினில் விவாகாளுக்கு செவ்வாய்க்கிழமையைக் கெட்ட நாளென்று கருதப்படுகிறதாம்.

15. 1783ளு ஆகஸ்ட் மாதம் 18-தேதியில் விழுந்த நட்சத்திரமே மிகப் பெரியதென்று கருதப்படுகிறது. அது ஒரு விநாடிக்கு 30-மைல் வீதம் ஸ்காட்லந்திலிருந்து இடலியின் மார்க்கமாகச் சென்று விழுந்ததாம்.

16. மடகாஸ்கரில் சில்க் மிக நயமாம். சில்க் துணியை அவ்விடத்தில் மிக ஏழ்மையானவர்கள் கூட அணிகிறார்களாம்.

17. சுமத்திராவிலுள்ள ரவ்விலீசியா என்ற புஷ்பம்தான் உலகத்திலுள்ளதில் மிகப் பெரியதாம். அதன் குறுக்களவு 9-அடியாம்.

18. ஆபிரிக்காவிலுள்ள பள்ளத்தாக்கே உலகத்தில் மிகப் பெரியதாம். அது பாலஸ்டையினின் வடக்கிலிருந்து ஆரம்பித்து, தெற்காக நெடால் வரையில் செல்கிறதாம். அது 5000-மைல் நீளமுடையதாம்.

19. அதிக சமீபத்திலுள்ள நட்சத்திரத்தை (Alpha Centauri) அடைய உனக்கு இஷ்டமானால், ஒரு நிமிடத்திற்கு ஒருமைல் வீதம் நடப்பாயானால், 18,000,000 வருடங்களில் அதை அடையலாமாம்.

20. விவாக மோதிரத்தைப் பெண்கள் அணிந்து கொள்ளும் வழக்கம் முதன் முதலில் ஈஜிப் தேயத்தில் உண்டாயிற்றும். பழையநாளில் புருடர்கள் வெளியே சென்றிருக்கும் போது புருடர்கள் தங்கள் அதிகாரத்தை தம் மனைவிகளுக்குக் கொடுத்திருப்பதைக் காட்டும் அறிகுறியாகப் பெண்கள் மோதிரத்தை அணிவார்களாம்.

P. G. குலசேகரன்.

---

ஒருவனுக்குக் கால முழுதும் தூக்கிக் கொடுத்துக் கொண்டும் உதவி செய்து கொண்டுமிருந்து, அதனல் அவன் நட்பையடைந்து வருவதாகில் அந்த நட்பு நீடிக்காது. கொடாத காலத்தில் அவன் பிரிந்து விடுவான். கை வறண்டாற் போய் வாருமென்றே நடுத்தலைக்கே குட்டும் விலைமகளிர் போன்றே இந்த நண்பனுமாவான்.




## ஓர் கணவனின் பிரலாபம்.

மனைவாழ்வுக் குறுதுணையாய் மகிழ்ந்தோரு
நங்கையை மணந்தேன்; 'வாழ்க்கையின்பம்
என்னை கவலை மறப்பிக்கும்' என முன் எண்
மனக்கோட்டை இடிந்ததையோ!
தினையளவும் இன்பமில்லை! தினந்தோறும்
எழும் சண்டை சேப்பப்போமோ!
வினைப்பயனை நுகர்கின்றேன்! வித்தகனார்
மனமிதுவேல், வேறேன் செய்வேன்? (1)

உறுதுயரம் விலகிட மற்றொருத்தியை யான்
மணந்தாலோ, உவகை வாழ்வு
பெறுவதேன்ன நிச்சயமோ? பிணக்கிரு
பெண்டிர்களிடை பெருகுமன்றே!
குறுகிய புன்மதியுள்ளார் கூறும் இதம்
கோள்வாரோ? குணம் திருந்தி
நறுங் குணத்தைப் பேறுவாரோ? நாய் வாலை
நிமிர்த்தலிலே நன்மை உண்டோ? (2)

ஒரு மோழிக்குப் பலமோழிகள் உரைத்தவளேன்
னோடேதிர்க்க, உற்ற சீற்றம்
ஒருவருக்கும் தேரியாதே உடனேடுக்கி
நடந்தேனே! உவகை சற்றும்
தருவதில்லை யென்றாலும் சஞ்சலத்தைப்
பெருக்காதே, சன்மார்க்கத்தில்
இருந்திடுவாளேல் அதுவே இன்பம்; எனக்
கவ்வோன்றே இயையுமன்றே! (3)

சாமமாம் பேதமாம் தானமாம் தண்டமாம்
சாற்றும் நான்கு
நாமமுடை வழிகளிலும் நானவளைத்
திருத்தியுமோர் நன்மையில்லை!
"தாமறிந்து திருந்தாரேல், சற்புத்தி
கேட்டேனும் சார்வார் நன்மை
யாமேன்பர்"; என்மனைவி யவளதிலும்
திருந்திலளே! அந்தோ! அந்தோ!! (4)

என்மீது கோதித்தவளாய் எதிர்ப்படுந்தன்
குழந்தைகளை இரக்கமின்றி
வன்மமோடும் அடிக்கின்றுள் ; வசைச் சொற்கள்
வழங்குவதில் வரம்பேயில்லை !
"என்மீது தப்பிதமே ; இனிப்பிழையேன் ;
பொறுத்தருள்வாய் !"—என்று மாமிக் (கு)
இன்மொழி சொன்னுல், அன்றே இல்லம் ஒரு
களிப்பகமாய் இலங்குமன்ருே ? (5)

வருவாயோ மிகக் குறைவு; வருபவரோ
பற்பலர் : என் வரவுகண்டு
ஒருகாலும் செட்டறியாள் ; " உன் கதி என்
பின் என்னுய் உறும் ? சற்றின்று
செருக்கின்றிச் சிந்தி"—எனில், "செப்பும்
விதவையரெல்லாம் செத்திட்டாரோ ?
இருக்க வழி அறியேனே ; என் மூழ்கிப்போகும் ?"
என இயம்பினுளே ! (6)

யாது திருந்துவதேது ? மதி அவளுக்
கவ்வளவே ! மனம் கோதித்து
தீதுக்குப் பதில் தீது செய்தல் தகாதேன
இன்று தேறியுள்ளேன் ;
எதுகதி அன்னவளுக் (கு) எனையன்றி
என எண்ணி இனிய மக்கள்
மீதுறும் என் வாஞ்சையினுல், வெய்ய
அவளைப் புறத்தில் விலக்ககில்லேன் ! (7)

மடியேறி விளையாடி மழலைமொழி
உரையாடும் மைந்தர்வாழ
கொடியா ளாயினு மவள்போல் குழவிகள்மேல்
பிறர் கவனம் கொள்ளாரென்று
நெடிதே யான் நினைந்ததனுல் நிகழ்பிழை
மன்னிப்பதுவே நேர்மையென்று
குடிமானம் வெளிச் சென்று குலையாமல்
அடக்கியின்று குன்றுகின்றேன் ! (8)

ஆரியூர் — வ. பத்மநாப பிள்ளை.

---

இந்தியாவுக்கு சுயராஜ்யம் வந்தபிறகும் அன்னியதேசப் பாதிரிமார்கள் மதம் மாற்றுதலை என் அபிப்பிராயப்படி கோணல் வழியாகச் செய்ய சுவாதீனம் இருக்கும். ஆனுல், என்னைப்போல அதுகோணல் வழி யென்று சொல்வதைப் பொறுத்துக் கொள்ள வேண்டியிருக்கும். (மகாத்மா.)

# அனுபவமணிகள்

1. கருத்தொருமித்த கணவனையும் மனைவியையும் கண்டு நகையாடுவதேன்? தங்களைப்போன்ற ராமராவண யுத்தம் புரியவில்லை யென்றா?

2. அநேக விஷயங்களில் குட்டுப்பட்டுத் தேறிய பெரியவர்களின் வாக்கே—பேசும் திறமையே—இனிமையாக இருக்கிறது. அந்த வார்த்தை ஒவ்வொன்றும் கேட்கக் கேட்க நமது தினசரி அனுபவத்திலும் அதே விஷயங்கள் நடந்திருப்பதையும் நமது மனம் அறிந்து ஒருவிதமான சுக நிலைமையை அடைகின்றது.

3. பூனைபோல் நமது வீட்டிற்கு வருவதும், தடபுடலாகப் பேசுவதும், பிறகு வெளியில் நம்மையே தூஷித்து வம்பு செய்வதும், எவரையும் தனக்குத் தெரியுமென்று மகா கர்வமாகச் சொல்லிக் கொள்வதும் சில புண்யாத்மாக்களின் வேலையாக இருக்கிறது.

4. இருவரிடத்திலும் சிநேகம் போலத் தாளம் போட்டுப் பேசும் குள்ள நரிகள் இவர்களைப்பற்றி அவர்களிடத்திலும், அவர்களைப்பற்றி இவர்களிடத்திலுமாகக் கலகக்கொள்ளியை வைத்து விட்டு, பிறகு இருவரிடத்திலும் அகப்பட்டதைச் சுறண்டிக் கொண்டு செல்லுவதும் வெகு விநோதமே.

5. நமக்கு வேண்டியவர்கள் எவரெவரோ, நாம் ஊருக்குப் புறப்படுகையில் எவரெவர்களை முதலில் பார்க்க நினைத்தோமோ அவர்களைத் தான் கடைசியிற் சென்று பார்க்கும் படியாக நேரிட்டு விடுகிறது.

6. நம்மையே தூஷிக்கிறார்கள், பிறகு நம்மைக்கண்ட விடத்து வெகு தடபுடலாக க்ஷேமம் விசாரித்து என் நினைவு இருக்கிறதா என்றுகேட்டு மிகவும் தித்திப்பான மனிதர்களாகிறார்கள். இந்த வேஷம் எதற்கோ? நாம் தூரச் சென்றபின் மறுபடியும் நம்மைத் தூற்றுவதற்கா?

7. கல்யாணத்தில் சரியாக உபசரிக்க வில்லையெனச் சம்மந்தி வீட்டார் திட்டுவது. வந்தவர்களோ காபி சரியில்லை யென்று தூற்றுவது. நாத்தியோஎனக்குப் பட்டுப்புடவை வாங்கவில்லை யென்று சண்டையிட்டு ஊருக்குப்போக மூட்டை கட்டுவது. பெண்ணைப் பெற்றவர்களோ இத்தனை சங்கடத்தில் அகப்பட்டு விழிப்பது, அப்பப்பா! பெண்ணைப் பெற்றது போதும்! போதும்!!

8. சிலருக்குத் தங்கள் ஊரிலுள்ள கோயிலின் தரிசனம் இனிப்பது போல், வெளியூர்களிலுள்ள கோயில்களின் தரிசனம் அவ்வளவாக இனிமை தருவதில்லையாம்.

9. ஊரை விட்டு வருவதற்குமுன் இரண்டு நாளில் திரும்பத் தீர்மானம். வந்த பிறகோ—?

10. எந்த விஷயங்களையும் எழுதும் போது அருகில் ஒருவர் அதை வரி வரியாகப் படித்துக் கொண்டே போவதாயிருந்தால் எழுதும் வேகம் தடைப் படுவதோடு விஷயங்களும் பொருந்தி வரைய வருவதில்லை. இந்த அனுபவம் அவர்களுக்கு எடுத்துக்கூ—

---

நான் சொல்வது உண்மையானதாயிருக்க, அதை நீங்கள் கேட்பதற்குச் சகிக்கவில்லையானால், நீங்கள் செல்லும் வழியில் ஏதோ தப்பிருக்கிறது. சகிக்க முடியாமை என்பது உங்கள் தோஷத்தால்தான் ஏற்பட்டிருக்கலாம்.

றினும் தெரிவதில்லை. நமது வேலையும் முடிவதில்லை.

11. நாவல்கள் சிலருக்குப் பிடிப்பதில்லை. அதற்கேற்றவாறு அவர்களுக்கு எழுத யோக்கியதையுமில்லை. ஆனால் பழிப்பதற்குக் குறைவில்லை.

12. உத்தம குணபூஷணிகள் தமது நாயகரின் அனுமதியுடன் அவரோடு சேர்ந்து தேச சேவை செய்யலாம். பிறருக்குப்பல கடிதங்கள் தாம் எழுதினாலும், அவற்றை தம் நாயகரிடமே அவர்கள் கொடுத்து விடுவது நலம். அவர் அவற்றைப் படித்து விட்டுத் தபாலுக்கு அனுப்பட்டும். தன் பிராணபதியின் சம்மதி பெற்று எதுவும் செய்வதில் குற்றமில்லை. பதியே தெய்வமென்று கருதும் பாவையர்க்கு எங்கும் ஸர்வ சுதந்திர முண்டு. இறைவனது அருளுமுண்டு.

13. தன்னைப் பற்றி ஆத்திரத்துடன் பெரிய மனஸ்தாபம் வளருகையில், தானே நேரில்போய் விடுவதால் பகை புகையாய் மறுநிமிஷம் மறைந்துவிடுகிறது.

14. கடவுளின் வரப் பிரஸாத மகிமையினால் சிலருக்குக் கவிகள் தானாகவே நீரூற்றுபோல் பெருகுகின்றன, சிலரோ ஒருபாடல் வரைவதற்கு எவ்வளவோ குட்டிக்கரணம் போடுகிறார்கள். எல்லாவற்றிற்கும் அருள் வேண்டாமா?

15. மோசககாரப் படுபாவிகளுக்கு இடமும் பேச்சும் கொடுத்து ஏமாராதே. பிறகுவேறுஎவர்களைக்கண்டாலும் உள்ளம் நடுங்குகின்றது. தேள் கொட்டி அனுபவப்பட்டவர்களுக்குப் பல்லியைப் பார்த்தாலும் அது தேள் தானோ என்று அஞ்சி நடுங்குவது போல இதுவுமாம்.

16. விவாகமான புதிய தம்பதிகளின் பார்வையும் நகைப்பும் குதூகலமும் ஒரு தெய்வீகம் பொருந்திய தேஜஸுடன் விளங்குகின்றது. அவர்களே சில குழந்தைகளைப் பெற்ற பிறகு இந்தப்புதிய தேஜஸு அங்கு ஒளிர்வதில்லை. எல்லாம் சரக்கு புதிதாய் இருக்கும்போதுதான் மணம்-அதிக ருசி- அதிக வசீகரம்-அதிக இன்பம்-அதிக ஆனந்தம்.

17. ஜட்காவண்டிகள் ஓட்டுபவனுக்குப் பந்தயமாகப் போட்டி விடுவதிலேயேநாட்டம். வண்டிக்குள் அகப்பட்டுக்கொண்டவர்களுக்கு ஆபத்தின்றி வீடுபோய்ச் சேரவேண்டுமே என்ற ஏக்கம். கடவுள் கிருபை நல்லதாக இருக்கும் வரையில் பயமில்லை.

18. சில டம்பாசாரிகள்—வம்பர்கள்—வழியே செல்வோரை வெகு அக்கரையாக அழைப்பதும், உங்களுக்காகத் தான் காத்திருக்கிறோம்—உங்கள் வீட்டிற்குத்தான் புறப்பட இருந்தோம்—என்று வெட்டிப் பேச்சுகள் பேசுவதுமாய்ப் பிறர் அவசரமாகச்செல்லும் வேலைகளைக் கெடுக்கிறார்கள்.

19. சிலர் நம்மிடம் வெகு அன்பகப் பேசி விட்டுப் பிறகு நம்மைப் பற்றி பேசும் கோஷ்டியில் சேர்ந்து விடுகிறார்கள்.

20. ஒரு விசேஷகாலத்தில்தான்—பிறர் தமது வீட்டிற்குவந்திருக்கும்

---

தியாகம் செய்வதும் பணிந்து போவதும் வெவ்வேறு விஷயம். தனக்குள்ள கஷ்டங்களை நோக்கித் தியாக புத்தியை விட்டுவிட வொண்ணாது. அவ்விதமே பயங்கொள்ளித்தனத்தால் பணிந்து விடக்கூடாது. கம்பீரமான சிந்தனையுடன் தன் மனசாக்ஷியும் ஒப்பிய பிறகே பணிதல் என்ற எண்ணம் தன் மனோபாவத்திலிருந்தும் தானாக வரவேண்டும்.

போது தான்—சில தம்பதிகள் தங்களுக்குள் அதிகமாகச் சண்டைசெய்து கொண்டு வந்திருப்பவர்கள் நகைக்கும் படியாகத் தங்களின் வீட்டு ரகசியங்களை யெல்லாம் வெளியாக்கி விடுகிறார்கள். இந்த சண்டையின் கோபம் தணிந்த பிறகே பிறர் சிரிக்கத் தாங்கள் நடந்து கொண்டதின் அவமானத்தை யுணர்கிறார்கள். [கலகமோ மண்ணோ எதுவோ நடந்தாலும் வீட்டுக்கு வந்தவர்கள் தங்கள்காரியத்தில் கண்ணாய் நன்றாகப்புசித்து ஏப்பம்விட்டுவிட்டுப் போய் விடுகிறார்கள். யார் எப்படிப் போனாலென்ன; வந்தவர்களுக்கு அதைப்பற்றி எல்லாம் அக்கரையில்லை. அவர்களின் காரியத்தில் மட்டுமே கவனம். ப-ர்.]

21. கோயில் பிரஸாதம் நன்றாயில்லை யென்பவர்கள், அதை ஒரு உணவாக எண்ணாமல் பகவத்பிரஸாதமாகப்பாவித்தால் வெகு ருசிகரமாக பரிமளிக்கும். மனம் தான் காரணம்.

22. தன் சொந்த ஊரை விட்டு வருவதற்கு முன் மனத்தில் ஒரு வித உணர்ச்சி, வந்தபிறகு ஒருவிதினுசு. பிறகு போகும்போது ஒரு மாதிரி. ஒவ்வொரு விதத்திலும் ஒவ்வொரு தனி உணர்ச்சி எதிர்படுகின்றது.

வை. மு. கோதைநாயகி அம்மாள்.

## பிறரிடம் பணம் கொடுத்து வைத்தல்.

அவர்கள் பணக்காரர்களென்று நம்பித் தங்கள் கையிலிருந்தால் செலவாய்விடுமென்று அவர்களிடம் கொடுத்து வைக்கிறார்கள். அந்தப் பணக்காரர்களோ தங்களின் அவசரச் செலவுகளுக்கு இந்தப் பணத்தைச் செலவிட்டு விடுகிறார்கள். பிறகு மறுபடியும் அந்தப் பணக்காரர்கள் செலவுக்கின்றித் திண்டாடும்போதுஇந்தஏழைகள் தங்கள் பணத்தை அவர்களிடம் கொடுக்க வர, நல்ல சமயத்துக்கு வந்ததென்று சந்தோஷமாய் வாங்கிக் கொள்கிறார்கள். பிறகு மொத்தமாகப் பணத்தைக் கேட்கையில் பணக்காரர்கள் பல நாளைக்கும் அலையவைக்கிறார்கள். கொடுத்த பணம் சில சமயங்களில் மோசமாகி விடுவதுமுண்டு. பிறரிடம் கொடுத்து வைப்பதை விடத் தங்கள் பெட்டியில் வைத்து வைப்பதேமேல். அல்லது தபாலாபீஸ் சேவிங்க் பாங்கியில் போட்டு வைப்பது இன்னும் அதிக பந்தோபஸ்தாகும். பணக்காரர்களை நம்பிக்கொடுத்து ஏமாறிப்போன ஏழைகள் எவ்வளவோ பேர்! எவரையும் நம்பிவிடவேண்டாம்.

குழந்தையைப் பறிகொடுத்தவர்கட்கே அதன் துக்கம் தெரியும். பக்கத்தில் தம் குழந்தையுடன் கொஞ்சுவோர் அத்துயரை அத்தனையாக அறியார். அன்னோர் தங்கள் குழந்தையுடன் கொஞ்சுவதை—குழந்தையை இழந்து ஏமாறினோர் ஆவலோடும் தம்மையே மறந்து நோக்குவர். ஊரெங்கும் குழந்தைகளிருப்பினும் தாம் ஈன்ற குழந்தைக்கு நிகராகுமா?

# வெளிநாடு சென்ற நமது கதைகள்.



இந்து தேசத்தில் ஸமஸ்கிருத பாஷையில் இருக்கிற சில அருமையான கதைகள் மேற்கேயுள்ள பற்பல தேசங்களில் போய் அந்தத் தேசங்களின் நடை உடை பாவனைக்குத் தக்கபடி மாறிப் பரவியிருப்பதாகத் தெரிய வருகின்றது. எப்படி யெனில், பூர்வத்தில் பாரசீகத்தை ஆண்ட ஒரு அரசன் இந்து தேசத்தில் சில அருமையான கதைகள் இருப்பதாகக் கேள்வியுற்று, ஒரு பண்டிதரை இத்தேசத்துக்கு அனுப்பி அக்கதைகளைப் பாரசீக பாஷையில் மொழி பெயர்த்தான். இந்தக் கதைகளையே பாக்டாட் பட்டணத்திலிருந்த ஒரு பண்டிதர் அரபி பாஷையில் மொழி பெயர்த்தார். பின்பு, வேறொருவர் அவைகளை ஹிப்புரு பாஷையாக்கினர். சில நாளான பின்பு அந்தக் கதைகளை கிரீக்குப் பாஷையிலும், லாத்தீன் பாஷையிலும் பெயர்த்து எழுதினர்கள். இதோடு நிற்காமல் இததாலி, பிரெஞ்சு, ஜெர்மன், இங்கிலீஷ் பாஷைகளிலும் நம்முடைய கதைகள் மொழிபெயர்க்கப் பட்டன. தற்காலத்தில் இங்கிலாந்தில் வழங்குகிற பல கதைகள் ஆதியில் நமது தேசத்திற் பிறந்தவைகள். நானாவர்த்தியில் உருமாறிப்போயின. கூர்ந்து பார்க்கில் சம்பந்தம் நன்றாய்த் துலங்கும். வடமொழியிலுள்ள ஒரு கதையை எடுத்து அது வெளித் தேசங்களுக்குப் போன விதத்தைப் பார்ப்போம். வடமொழியில் பஞ்சதந்திர மென்கிற கதைப் புஸ்தகம் ஆதியில் உற்பத்தியானது. அதிலிருந்து ஒரு கதையைக் கீழே எடுத்துச் சொல்லுவோம்.

## 1

ஒரு ஊரில் சுபாவ கிருபணன் என்று ஒரு சாதாரணப் பிராமணனிருந்தான். அவன் ஒரு நாள் கொஞ்சம் அரிசி பிச்சை யெடுத்துத் தான் புசித்து மிகுந்ததை ஒரு பானையிற் போட்டு அப்பானையைச் சுவரிலிருந்த மூளையில் தூக்கியிருந்தான். பின்பு கீழே மணையின்மேல் உட்கார்ந்து இராமுழுதும் அரிசிப் பானையைப் பார்த்துப் பின்வருகிறபடி யோசித்தான். "அந்தப் பானை நிறைய அரிசியிருக்கின்றது; பஞ்சகால மானல் அதைப் பத்து ரூபாய்க்கு விற்கலாம். அந்தப் பணத்தைக்கொண்டு இரண்டு ஆடுவாங்கி இடையனிடத்தில் விடுவேன். அவைகள் ஆறுமாதத்திற் கொருதரம் குட்டி போட்டால் ஒரு மந்தை ஆகும். பின்பு ஆட்டை விற்றுப் பசு வாங்கிக் கன்று போட்டவுடனே அக்கன்றுகளை விற்பேன். அதற்குப் பின்பு பசுவை விற்று எருமையும், எருமையை விற்றுப் பெட்டைக் குதிரையும் வாங்குவேன். குதிரை குட்டி போட்டவுடனே அவைகளை விற்றுப் பணமாக்குவேன். பின்பு நாலு தாழ்வாரமுடைய வீட்டை வாங்குவேன். வீடு வாங்கின பின்பு பிராமண னெவனாவது என் வீட்டுக்கு வந்து அவன்

---

வீட்டுக்காரனுக்கு வீட்டில் சிறிதாவது ஸந்தோஷம் இருக்கும் படி செய்ய வேண்டும். அவ்விதமின்றி அவனைப் பிடுங்கித் தின்னும் பாவைமார் சீக்கிரத்தில் அவனை மசானத்திற்கோ வெளியூருக்கோ அனுப்பிவிடக்கூடியவர்களே.

மகளை எனக்கு விவாகம் செய்து கொடுத்துத் திரண்ட சீதனமும் தருவான். எனக்குப் பிள்ளை பிறக்கும். பிள்ளைக்குச் சோமசர்மன் என்று பெயரிடுவேன். குழந்தைக்கு மடியில் வைத்துத் தாலாட்டும் பருவம் வந்தவுடன் நான் குதிரைக் கொட்டாரத்துக்குப் பின் பக்கத்தில் ஒரு புஸ்தகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருப்பேன். படித்துக்கொண்டிருக்கும்போது பிள்ளை என்னைப்பார்த்ததும் தாயின் மடியிலிருந்து இறங்கி என்னிடம் ஓடிவரும். குதிரையின் காலருகில் வருவதைப் பார்த்துக் கோபித்து மனைவியை நோக்கிக் "குழந்தையை எடு, குழந்தையை எடு" என்று சொல்லுவேன். நான் சொல்லுவது வீட்டு வேலையில் கவனித்திருக்கிற மனைவிக்குக் கேளாது. உடனே நான் எழுந்து அவளை இப்படி உதைப்பேன்"—என்று இப்படியாக நினைத்துக்கொண்டே பானையைக் காலால் உதைத்து உடைத்து விட்டான். அரிசி யெல்லாம் அவன்மேல் விழத் தேகமுழுதும் தவிடு படிந்து வெளுத்துத் தோன்றிற்று. ஆதலால் இனி வருவதைப் பற்றி விபரீத யோசனை செய்பவன் சோம சருமனின் தகப்பனைப்போல் அவமான மடைவான்.

## 2

"ஹிதோபதேசம்" என்னும் கதைப் புஸ்தகம் "பஞ்சதந்திர"த்துக்குப் பின்னிட்டு உண்டானது. அதில் மேற்சொல்லிய கதை கீழ்வருமாறு காணப்படுகின்றது.

தேவி கோட்டை யென்னும் ஊரில் தேவசர்மனென்று ஒரு பிராமணனிருந்தான். தைப்பொங்கலன்றைக்கு அவனுக்குப் பானை நிறைய அரிசி கிடைத்தது. அதை எடுத்துப் போகையில் வெயிலாற் களைத்துப் பானைச் சட்டிகள் நிறைந்த ஒரு குயவனுடைய கடைக்குப்போய் ஒரு மூலையிலே படுத்து உறங்கப் போனான். தன் அரிசிப் பானையைக் காப்பதற்குக் கையிலே ஒரு கொம்பைப் பிடித்துக் கொண்டு யோசனை பண்ணத் தொடங்கினான். "இப்போது இந்தப் பானை அரிசியை விற்றால் அதில் வருவதைக்கொண்டு பானை சட்டி வாங்குவேன். பின்பு முதல் அதிகமாக அதிகமாக வெற்றிலைப் பாக்கும் வஸ்திரமும்வியாபாரஞ்செய்து மிகுந்த பணக்காரனுவேன். பின்பு நான்கு (!) பெண்களை விவாகஞ் செய்வேன். அழகும் யௌவனமு முடைய நான்காவது தாரத்தின்மேல் மிகவும் பக்ஷமாயிருப்பேன். இதைக் கண்டு மற்ற மனைவிகள் கோபித்துச் சச்சரவு செய்வார்கள். நானும் கோபங்கொண்டு ஒரு கொம்பை எடுத்து அவர்களை நன்றாக அடிப்பேன், என்று நினைத்துக் கொண்டு கையிலிருந்த கழியை விட்டெறிந்தான். அரிசிப் பானையும், கடையிலிருந்த பல பானை சட்டிகளும் நொறுங்கிப் போயின. குயவன் சத்தம் கேட்டுக் கடைக்குப் போய்ப் பானை சட்டிகள் உடைந்து கிடப்பதைக்கண்டு பிராமணனைத் திட்டி வெளியில் ஓட்டி விட்டான். ஆதலால் விபரீதயோசனை செய்பவன் அந்தப் பிராமணனைப்போல் வருத்த மடைவான்.

## 3

இக்கதை அரபி பாஷையில் கீழ் வருமாறு சொல்லி யிருக்கிறது.

பக்கிரி ஒருவன் நாடோறும் ஒரு வியாபாரி வீட்டிலிருந்து கொஞ்சம்

---

நல்லோர்க்கு நன்மை விளைவிக்கவும், தீயோருக்குத் தீமை விளைவிக்கவும் கடவுள் ஒருவர் இருக்கிறாரல்லவா? அவரது செங்கோல் தவறுவதில்லை.

வெண்ணெயும் தேனும் வாங்கிச் சாப்பிட்டு வந்தான். போதுமானதைச் சாப்பிட்டுவிட்டு மிகுந்ததை ஒரு ஜாடியில் வைத்து அறையின் மூலையில் ஒரு ஆணியில் தொங்க விட்டிருந்தான். நாளாவர்த்தியில் அந்த ஜாடி நிறையுமென்று எண்ணி யிருந்தான்.

ஒரு நாள் ஜாடிக்குக் கீழே ஒரு கொம்பைக்கையில்பிடித்துக்கொண்டு கட்டிலின் மீது சாய்ந்து கொண்டு தேனும் வெண்ணெயும் கிராக்கியாய் இருப்பதைப் பற்றித் தனக்குள் ஆலோசிக்கத் தொடங்கினான். "நான் ஜாடியில் இருப்பதை விற்றுப் பத்து வெள்ளாடுகள் வாங்குவேன். அவைகளும் அவைகளுடைய குட்டிகளும் ஐந்து மாதத்துக்கு ஒருதரம் குட்டி போடும். கொஞ்ச காலத்திற்குள் ஒரு மந்தையாகும். இரண்டு வருஷத்தில் அவைகள் நானூறுக்குக் குறையாமலிருக்கும். பின்பு நாலு ஆட்டுக்கு ஒரு காளை அல்லது பசுவாக நூறு காளையும் பசுவும் வாங்குவேன். பின்னிட்டு நிலம் வாங்கி வேலைக்காரரை வைத்து உழுது பயிர் செய்வேன். விளையும் தானியத்தையும் பாலையும் விற்று ஐந்து வருஷத்தில் திரண்ட பணம் சேர்ப்பேன். பின்பு ஒரு பெரிய வீடு கட்டி ஆண்பிள்ளைகளையும் பெண்பிள்ளைகளையும் வேலைக்கு நியமிப்பேன். இவைகளெல்லாம் முடிந்தவுடன் விசேஷ ரூபவதியான ஒரு பெண்ணை விவாகம் செய்வேன். சிறிது காலத்தில் அவள் பிள்ளை பெறுவாள். அப்பிள்ளை என் சொத்துக்குப் பாத்தியஸ்தனாகும். போதுமான வயது வந்தவுடனே என் பிள்ளை படிப்பதற்குத் தகுந்த உபாத்தியாயர்களை நியமிப்பேன். நன்றாய்ப் படித்து வந்தால் நான் எடுத்துக்கொண்ட சிரமத்துக்குப் பிரயோஜனமாகும். இல்லாவிடில் என் கையிலிருக்கிற கோலினால் என் மனவருத்தம் தெரியும்படியாக அவனை அடிப்பேன்" என்று சொல்லிக் கழியைப் பிடித்த கையைத் தூக்கவே கழிபட்டு ஜாடி உடைந்து, அதிலிருந்த வெண்ணெயும் தேனும் அவன் தலையிலும் முகத்திலும் நிறைந்து நினைந்தது.

4

இக்கதை கிரீக் பாஷையிலும் இருக்கின்றது. அது எவ்வாறெனில்:-

ஒரு பிச்சைக்காரன் தன் படுக்கை யருகில் ஒரு ஜாடியில் தேனும் வெண்ணெயும் வைத்திருந்தான். ஒருநாள் இராத்திரி கீழே சொல்லுகிற விதமாய் யோசிக்கத் தொடங்கினான். "இந்தத் தேனும் வெண்ணெயும் விற்றுக் கொஞ்சம் பணம் சம்பாதிப்பேன். அந்தப்பணத்தைக்கொண்டு பத்து வெள்ளாடு வாங்குவேன். ஐந்து மாதத்தில் இருபது ஆடாகும். ஐந்து வருஷத்தில் நானூறாகும். அவைகளை விற்று நூறு பசு வாங்குவேன். அவைகளைக் கொண்டு நிலம் வாங்கிப் பயிரிடுவேன். கன்றும் தானியமும் விற்று ஐந்து வருஷத்தில் பணம் சேர்த்து நான்கு தாழ்வார முள்ள சொர்ண கசிதமான வீட்டைக் கட்டி வேலைக்காரரை நியமித்துக் கல்யாணம் செய்து கொள்வேன். பிள்ளை பிறக்கும். அதற்கு அழகனென்று பெயரிடுவேன். தகுந்த வயது வந்த பின்பு அவனைப் படிக்க வைப்பேன். படிக்காமல் சோம்பலாயிருந்தால் இந்தக் கொம்பினால் அடிப்பேன்." இப்படிச் சொல்லிக்கொண்டு

---

வாடி போடி என்று தன் குமார்த்தியைத் தாயார் அழைப்பது அகௌரவம். அது மட்டித்தனம். வா அம்மா, போ அம்மா என்று மரியாதையாக வசனிப்பதே அந்தக் குமார்த்தியும் மரியாதையைக் கற்றுக்கொள்ள வழியாகும்.

அருகிலிருந்த தடியை எடுத்து வீசவே அது ஜாடியின் மீது பட்டு உடைந்து தேனும் வெண்ணெயும் சிந்தி அவன் தாடி நனைந்தது.

5

இந்தக் கதை லத்தீன் பாஷையில் மொழி பெயர்க்கப் பட்டது. அதை இங்கிலீஷிலும் எழுதி யிருக்கிறார்கள். அதைக் கீழே சொல்லுவோம்.

மூற்காலத்தில் ஒரு ஸ்திரீ தன் மகளிடத்தில் ஒரு பானைப் பாலைக் கொடுத்துப் பட்டணத்தில் விற்று வரும்படிச் சொன்னாள். விற்று வரும் போது வழியில் ஒரு அகழின் அருகில் களையாற உட்கார்ந்து ஆலோசிக்கத் தொடங்கினாள். பால்விற்ற பணத் தைக்கொண்டு ஒரு பெட்டைக் கோழிவாங்கி அது குஞ்சு பொரித் துக் குஞ்சுகள் பெரிதான பின்பு அவற்றை விற்றுப் பன்றி வாங்கி, பின்பு பன்றியை விற்று ஆடும், ஆட்டை விற்று மாடும் வாங்கி, இப் படியாக இறுதியில் திரண்ட பணம் சம்பாதித்துப் பெரிய மனுஷன் ஒரு வனை விவாகம் செய்து கொள்வேன். விவாகச் சடங்கு முடிப்பதற்கு நானும் மாப்பிள்ளையும் குதிரையேறிக் கோயி லுக்குப் போவோம். குதிரையைச் சீக்கிரமாகப் போகும்படிக் காலால் உதைப்பேன்-என்று காலைத் தரையி லூணவே கால் நழுகி அருகிலிருந்த அகழியில் தான் பால் குடத்தோடும் விழுந்தாள். ஃ

இவ்வாறாக வடமொழியில் உள்ள கதைகள் வெளித் தேசங்களுக்குப் போய் உருமாறி வழங்கி வருகின்றன. இதைப் போன்ற கதைகள் இன்னும் பல உண்டு. அவைகளில் ஒன்றைக் கீழே சொல்லுகிறோம். அது எல்லாத் தேசங்களிலும் எல்லாப் பாஷைகளி லும் காணப்படும்.

6

ஒருவனை ஒரு சிங்கம் தொடர்ந் தது. அதைப் பார்த்து அவன் தப்பி ஓடும்போது வழியிலிருந்த ஒரு பள் ளத்தில் விழுந்தான். விழும்போது பள்ளத்தின் பக்கத்தில் முளைத்திருந்த ஒரு சிறு மரத்தை இரண்டு கையினு லும் தாவிப் பிடித்துக் கொண்டான். மரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அதன்மீது நிற்கையில் சிங் கத்தினிட மிருந்து தப்பித்துக் கொண்டதாக நினைத்தான். இப்படி யிருக்கும்போது தான் பற்றியிருந்த மரத்தின் வேரை இரண்டு பெருச் சாளிகள் பறிப்பதைப் பார்த்தான். அவைகளில் ஒன்று வெள்ளை, மற் றொன்று கறுப்பு. பள்ளத்தின் கீழே பார்த்தபோது அங்கே ஒரு பைசாசு அவனை விழுங்க வாயைத்திறந்து கொண்டு இருக்கக்கண்டான். அவன் கால் வைத்திருந்த இடத்தைப் பார்த்தபோது அங்கே ஐந்து பாம்பு கள் தலையை நீட்டிக் கொண்டிருந் தன. மேலே பார்த்தான்; மரத்தின் உச்சியிலிருந்து தேன் சொட்டிக் கொண்டிருந்தது. உடனே சிங்கத் தையும், பைசாசையும், பெருச் சாளியையும், பாம்பையும் மறந்து விட்டுச் சொட்டிக் கொண்டிருக்கிற தேனைச் சாப்பிடுவதற்கு யத்தனஞ் செய்தான். ஃ

இந்தக் கதையில் சொல்லிய சிங்க மென்பது இயமன்; பள்ள மென்பது இவ்வுலகம்; சிறுமரம்

---

மத விஷயமான விவாதங்களுக்குக் கோர்ட்டாரின் தீர்மானத்தை எதிர் நோக்குவது புத்திக் குறைவே. இருகக்ஷியினரும் கோவிலை விட்டுக் கோர்ட்டுக் கச்சேரியின் வாயிலிற் கிடக்கின்றனர். இதுவே முக்திக்கு வழிபோலும்!

என்பது நமது ஆயுட்காலம்; அதைத்தான் இரவும் பகலுமாகிய பெருச்சாளிகள் பறிக்கின்றன. ஐந்து பாம்பும் பஞ்சபூதம்; பைசாசு என்பது நரகம். இவை களையெல்லாம் மறந்து மனிதர்கள் அல்ப சுகத்தைத் தேடுகிறார்கள் என்பது இக்கதையின் கருத்து.

ஃ

இதைப்போன்ற வெளித்தேசம் போன வடமொழிக்கதைகள் பல. அக்கதைகளில் யாவரும் தெரிந்து அனுசரிக்கத்தக்க புத்திமதிகள் சொல்லியிருக்கின்றமையால், அவை வாலிபரும், விருத்தரும், தனிகரும், தரித்திருமாகிய எல்லோர் கருத்திலும் நிலைபெற்று வழங்கி வருகின்றன.

ஃ

நம் நாட்டிலிருந்து வெளித் தேசங்கட்குச் சென்ற கதைகள் கற்பிக்கும் உத்தமமான போதனைகளுக்கும், இப்போது வெளிவந்துள்ள ஆங்கில மொழி பெயர்ப்புக் கதைகளால் உணரும் போதனைக்கும் உள்ளபேதம் பேசவுங் கூடுமோ?

## அதுவும் ஒரு அதிர்ஷ்ட வேளையே!

தான் தங்கியிருந்து வருவதற்கென்று போன வீட்டில் தனக்கு முன்பாகவே இரண்டு விருந்தினர் வந்துவிட்டு அவர்கள் பொருட்டாகத் தடபுடலான போஜன வகைகள் சித்தமாயிருக்க, அந்த சமயம் தானும் அங்கு நுழைய, தனக்கும் ஒரு இலை போடப்பட்டு நல்ல ருசிகரமான சாப்பாடு கிடைத்து விடுகிறது. வீட்டினரும் தனக்கென்று கஷ்டப்படாமல், மற்ற விருந்தினருக்கென்றே கஷ்டப்பட்டு யாவும் செய்து வைத்திருப்பதால், தான் வந்தது அவர்களுக்கு ஒரு பளுவாகவும் தோற்றுகிறதில்லை. தனக்கும் பிரயாசையின்றி சௌகரியமான போஜன வசதி எற்பட்டு விடுகிறது. இப்படியே, ஒரு ஊருக்குச் சென்றிருக்கையில் அதே நாளில் அந்த ஊரிலுள்ள ஆலயத்தில் திருவிழா நாளாக நேர்ந்து கொள்ள, தானும் உத்ஸாகமாய்ப் பகவானைச் சேவித்துப் பரவசப்படப் பாக்கியம் கிடைத்து விடுகிறது. அது அந்தந்த நேரத்தின் அதிர்ஷ்ட வேளை தான். அல்லது தான் வீட்டைப் புறப்பட்ட நல்லவேளையின் பலனாகவும் இருக்கக்கூடும்.

தூங்குகிறவனின் தொடையில் கயிறு திரிப்பது எப்போதும் நடக்கக் கூடிய தொழிலல்ல. தூங்குகிறவன் விழித்துக் கொண்டவுடன் கயிறு திரித்துக் கொண்டிருந்தவனின் வேலையும் நின்றுதான் போகும். அதுபோலவே நட்பு காட்டித் தன்னிடமிருந்து எவ்வளவு பறித்துவிட்டார்களென்று ஒருவன் உணர்ந்து விடும்போது—பிறகு அவனை மற்றவர்கள் ஏமாற்ற முடியாது.

# சிறுமணித்திரள்

(274-ம் பக்கத் தொடர்ச்சி.)

888. வைதீகர்கள் வசிக்கும் அக் கிராஹாரத்தில் சென்று நோக்கினும் அங்கும் ஆங்கிலமே. ஆனால், வைதீகர் என வாதிப்பதற்கு அவர்கள் உச்சியில் சிறு குடுமியைமட்டும் இன்னும் விடக் காணோம்.

889. நாம் கடவுளைத் தொழ எத்தனையோ முறை கோவிலுக்குச் சென்றிருக்கிறோம். ஆனால், என்றைக்காவது பிறரின் நலம் கருதிக் கடவுளைத் தொழுதோமா? இல்லை. நம் பெண்டு பிள்ளைகளும் நமது வியாபாரமும் ஓங்கவேண்டுமென்றே கடவுளைத் தொழுகிறோம்.

890. ஒரு காரியத்தைச் செய்வதிலேற்படும் நன்மை தீமைகளைக் கொண்டு புது அநுபவம் பெற்று விடுகிறோம். அநுபவமானது உலகவாழ்வில் நம்மை முன் ஜாக்கிரதையுள்ளவனுகச் செய்துவிடுகிறது.

891. எத்தனையோ கிராமங்கள் அழிக்கப்பட்டுப் பெரிய பட்டணங்கள் உதயமாகி விடுகின்றன; அதுபோல் பல சாமான்ய ஜனங்களைத் துக்க சாகரத்தில் ஆழ்த்தி ஒரு சிலர் பணக்காரர்களாகி விடுகின்றனர்.

892. ரயில்வே கம்பெனியில் எத்தனையோ ஆபீஸரும் சிப்பந்திகளும் வைத்திருந்தும் ரயில் வண்டிகள் தாமதித்து வருவது சகஜமாயுள்ளது. ஆனால், சூரியனே குறித்தநேரத்தை தவறவிடக்காணோம். இதுவே தேவ சக்திக்கும் மனிதசக்திக்குமுள்ள வித்தியாசமாகும்.

893. மழைபெய்யலாமென எண்ணிஎப்படி விதை விதைக்கக் கூடாதோ, அதே போல் ஒருவரை நம்பி கல்யாணத்தையோ வியாபாரத்தையோ ஆரம்பிக்க எண்ணி விடாதே. எதுவும் தன் கால் பலத்தில் நிற்பது போல் ஆகா.

894. சரியாக இணைக்கப்படாத இருப்புப்பாதையிலிருந்து எப்படி புகைரதங்கள் தவறிவிடுகின்றனவோ அதேபோல் அநுபவமில்லாத மனிதர்கள் உலகப் பாதையிலிருந்தும் தவறி விடுகின்றனர்.

895. கவன்விலராகும் வரை அந்த மனிதர் எத்தனையோ காருண்ய சீலராய் விளங்கினர். பிறகோ தம்மைத் தெய்விப் பிறவியென நினைத்துவிட்டார். கவன்விலர் பதவி ஒழிந்துபோனதும் மூலையில் குந்தினர்.

896. நாம் செய்த குற்றங்களை நம் மனச்சாக்ஷி குற்றமென உணர்ந்தும் நாம் வெளிப்படையாக அதை ஒப்புக் கொள்ளத் தயங்குகிறோம். ஆனால், மகாத்மா தான் தவறுவழி சென்றதைப் பொதுஜனங்களுக்கு விளம்பரப்படுத்துவதில் சந்தோஷப்

---

யார் கெட்டாலும் நமக்கென்ன?—அவர்களின் வீட்டுக் கலகத்தில் நாம் என் தலையிட? இருபக்கத்தாரும் சொல்வதைக் கேட்டு, இரண்டு பக்கமும் இனிக்கப்பேசிவிட்டு, எவருடைய விரோதமுமில்லாமல் பார்த்துக்கொண்டு போய்விடுவோமென்பதே தலையாட்டி நரிகளின் தந்திர சமர்த்து. இத்தகையோரது நேசமும் வேண்டாம், விரோதமும் வேண்டாம்.

படுகிறார். தன்னை மறந்தவர் எவரோ அவர்தான் மகாத்மா.

897. ஐம்பது வயதுப் பெண்ணை எந்த முட்டாள் வாலிபரும் மணக்கத் தயாரில்லை. ஆனால், நமது பெற்றோர்கள் ஐம்பது வயது வாலிபக் கிழவருக்குப் பெண்களை விற்று விடுகின்றனர்.

898. லாபமடைந்த வருடத்திலோ, வியாபாரம் தனது சாமர்த்தியமெனப் புகழ்கிறான். நஷ்டம் வந்தால் அது கடவுள் செயல் என்கின்றான்.

899. அறிவு இருக்கும்வரை அபிப்பிராயபேதமும் இருந்தேதீரும். அதே போல் பணக்காரன் ஏழை என்ற பாகுபாடுகளிருக்கும் வரை ஜாதி சமயம் ஒழியினும் உயர்வு தாழ்வுயிருந்தே தீரும். மந்திரி பதவியடைந்தவருக்கு நாம் செய்யும் வரவேற்பில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூட சாமான்ய மனிதருக்குச் செய்வதில்லையே!

900. முன் சாக்கிரதையுள்ள வியாபாரி நஷ்டமடைய, சாக்கிரதையற்ற வியாபாரியோ லாபமடைந்தும் விடுகிறான். இது என்ன விந்தையோ!

901. அன்று இருந்த நிலையை நினைந்து வருந்துவதைக் காட்டிலும் இன்றுள்ள நிலையில் நம்மை எப்படி திருத்திக்கொள்வதென்பதைக் கண்டு பிடிக்க முயல்வதே சந்துஷ்டி தருவதாகும்.

M. P. துருசாமி நாடார்.

## கௌரவம் என்பது எது?

தர்ம நியாயமான சிக்கனமே கௌரவம். எவ்வகையிலும் கடன் படாமை கௌரவம். மோட்டார் முதலிய செலவுகளின்றி சாதாரண வாழ்வில் வாழ்க்கையை நடத்துவது கௌரவம். ஏழைகட்கு இல்லையென்னுமை கௌரவம். வருந்தி விரும்பி யழைப்பினன்றி எவர் வீட்டிலும் புசிப்பெடுத்துக் கொள்ளாமை கௌரவம். மற்றவர் தன் வீட்டிற்கு வரப்போக இருப்பது கௌரவம். சொன்ன சொல் தவறாமையும், நாணயமும், தானே வலியச்சென்று பிறர் கணக்கைத் தீர்ப்பதும், கபடமற்று வெள்ளை மனமாய் உண்மையோடு வாழலும் கௌரவம். தேகத்தின்மீது சொற்ப நகைகளும், பாங்கியில் அதிக பணமும் கொண்டிருத்தல் கௌரவம். 26-ரூபாய் வரவில் 20-ரூபாய் செலவிட்டு 6-ரூபாய் மிச்சப்படுத்துவது கௌரவம். இதுவே கால முழுதும் கௌரவப்படவும் வழி தேடிவிடும்.

பணம் ஒரு சமயம் சம்பாதித்து விடலாம். தன் ஆபத்து அவசரங்கட்கு வந்து தன் பக்கத்திலிருந்து வேலை செய்யக்கூடிய மனிதர்களைத் திடீர் என்று பெற்று விடுவது சாத்தியமல்ல. அந்த மனிதர்களைப் பழயவகையிலிருந்தே தான் பொறுக்கி எடுக்கும்படியிருக்கும். ஆகவே, அந்தப் பழயவர்கள் தன் வீட்டில் அதிக நாள் தங்கி நின்றாலும் பொறுத்துக்கொள்ள வேண்டியதே.

# விநோதக் கடிதங்கள்.

## I. கணவனும் மனைவியும்.

### 1

அன்புள்ள கோகிலத்துக்கு,

நான் பார்த்துவரும் இந்த டிக்கட் பரிசோதகர் வேலை வெகு கஷ்டமாயிருக்கிறது. நான் இதை விட்டுவிட நினைத்திருக்கிறேன். வேலையிலிருந்து நீங்கி விட்டால் மாதா மாதம் அதன் மூலம் வருகிற பணமும் நீங்கி விடுமேயென்று வருந்துகிறேன். வியாழக்கிழமை கொக்குபுரத்தில் இருப்பேன். பதில் அங்கு எழுதவும். பூனைச்சிகிட்டு.

### 2

பிரியமுள்ள எஜமானருக்கு,

அடியாள் நமஸ்காரம். தாங்கள் வேலையை விட்டு விலகி விடுவது நல்லதே. என் ஒருத்தியாலேயே வீட்டு வேலைகளெல்லாம் செய்து கொள்ள முடியவில்லை. நீங்களும் என் பக்கத்திலேயே இருந்தால், பாத்திரங்கள் துலக்க, அடுப்பு மூட்ட—சேலைகள் துவைத்துத் தர—எனக்கு மிக்க உதவி செய்வீர்கள். ஆனதால் எவ்வளவு சீக்கிரம் வேலையை விடுகிறீர்களோ அவ்வளவும் எனக்கு நல்லதே. கோகிலம்.

### 3

கோகிலத்துக்கு,

நீ மூக்கப்பனிடம் கொடுத்தனுப்பிய கடிதம் கிடைத்தது. அதை ஒட்டி யனுப்பாததால் இங்கு பலரும் பார்த்து விட்டு வேலையை விட்டு விடப் போகிறீர்களோ என்று என்னைக் கேட்டனர். அது எனக்குத் தலையிறக்கமாய் விட்டது. இனிமேல் எவரிடமும் கொடுத்தனுப்பாதே. தபாலிலேயே அனுப்பு. நமது வீட்டுச் சங்கதிகளை மற்றவர்கள் அறியும்படி நாம் செய்து கொள்ளக் கூடாது. மற்றவர்கள் தங்கள் வீட்டுச் சங்கதிகளைச் சொல்ல வந்தாலும், அவர்களைப்போல் மூடத்தனமாய் நமது குடும்ப ரசசியங்களை நாம் வெளியிடக் கூடாது. அதில் ஏற்படும் கேவலம் நமக்கே தான். ஞாயிற்றுக் கிழமை நரிப்பாளையத்தில் இருப்பேன். பூனைச்சிகிட்டு.

### 4

என் பிரியமுள்ள தலைவருக்கு,

தாங்கள் எழுதியது சரி. நமது சொந்த வேலையை நடத்திக் கொள்ளவும், முடித்துக் கொள்ளவுமே நாம் பிறாது வீடுகளில் தங்குகிறோம். அவ்வ

ளவே தவிர, அவர்கள் மீது அன்போ, ஆவலோ நமக்குச் சற்றும் கிடையாது. எல்லாம் நமது காரியத்திற்காகவே நாம் தித்திப்பான பேச்சுகளை அவர்களிடம் பேசுகிறோம். அவர்கள் அதை உண்மை யென்று நம்பிவிட்டுத் தங்களுக்கு மிகவும் வேண்டியவர்களாக நம்மை நினைத்துத் தங்கள் வீட்டுக் கலக சச்சரவு களை நம்மிடம் பாடம் சொல்லுகிறார்கள். நாம் மெதுவாக இரண்டு பக்கத்திலும் தலையாட்டி விட்டுப் போய்விடுகிறோம். இதை அந்த மூடர்கள் அறிவதில்லை. நான் இனி தபாலிலேயே கடிதம் போடுகிறேன். கோகிலம்.

5

கோகிலத்துக்கு,

நீ என் கார்டில் எழுதினாய். நான் வெளியில்போய் வருவதற்குள் வீட்டில் அதை எல்லோரும் வாசித்து விட்டு நம்மை சுயநலப்புலியென்று பழித்தார்கள். எனக்கு மிக்க நாணமாகிவிட்டது. இனி கவரிலேயே எழுது. புதன்கிழமை வரையில் இங்கேயே இருப்பேன். பூனைச்சிகிட்டு.

6

அன்புள்ள எஜமானருக்கு,

கவரிலேயே இனி எழுதுகிறேன். தங்களின் வேலை விஷயத்தைப் பற்றி ஒன்றும் எழுத வில்லையே? நாம் முன்பு ஒரு மாதம் வரை தங்கிப் புசித்து விட்டு வந்த வீட்டார் இங்கு நமது இல்லத்திற்கு வந்தார்கள். நான் வெளியுபசாரமாகவே அவர் ஊரில் இல்லையென்று சொல்லிக் கை கடிக்காமல் அனுப்பிவிட்டேன். எல்லாம் தங்களிடம் கற்றதுதான். கோகிலம்.

7

கோகிலத்துக்கு,

உன் கவர் கிடைத்தது. நான் வேலையை விடுவதற்குள் வேலையே என்னை விட்டுப் போய்விட்டது. ரயில்வே கம்பெனியார் "சிக்கன"த்தை உத்தேசித்து 216-டிக்கட் பரிசோதகர்களில் 128-பேரை நீக்கி விட்டார்கள். நீக்கப்பட்டவர்களில் நானும் ஒருவன். வேலையிலிருந்தபோது அது மிகவும் கஷ்டமாக இருந்தது. இப்போது வேலையிலிருந்து தள்ளப்பட்ட பிறகோ அது எனக்கு அருமையாகப் படுகிறது. இனி எப்படிப் பிழைப்பதோ? துக்கத்துடன் நாளை புறப்பட்டு வருகிறேன். பூனைச்சிகிட்டு.

---

பழைய மறைந்த சங்கதிகளைக் கிளறிவிட்டு அதிலிருந்து ஒரு சண்டையைச் சிலர் ஆரம்பிப்பர். காலம் எனும் பெரிய குழியைத்தோண்டி அதில் புதைத்து விட்ட சங்கதிகளை மறுபடி தோண்டி எடுத்து வைத்துக்கொண்டு இழவு கொண்டாட வேண்டிய அவசிய மென்ன? இந்தச் சண்டையின் மூலமாக ஏதேனும் தன்னுடைய காரியமொன்றை அதனோடு சேர்ந்தாற்போலப் பிரஸ்தாபித்து அதை நிறைவேற்றிக்கொள்கிற உத்தேசமா யிருக்கலாம்.

## II தடபுடல் விருந்து.

### 8

அன்புள்ள அப்பா,

நாங்கள் மதுரையில் அழகர் உத்ஸவம் சேவிக்கப் புறப்படுகிறோம். தங்கள் நண்பர் இளிச்சவாயருக்கு நாங்கள் அவர் வீட்டில் வந்து தங்குவதற்காக ஒரு கடிதம் எழுத வேண்டுகிறேன். கருப்பையா.

### 9

அன்புள்ள கருப்பையாவுக்கு,

நீங்கள் வருவதை இளிச்சவாயருக்கு எழுதினால், அவர் அந்த சமயம் செலவுக்கு அஞ்சி வீட்டைப் பூட்டிக் கொண்டு எங்கேனும் போய் விடலாம். ஆதலின், நான் திருநெல்வேலியில் கல்யாணம் முடிந்ததும் 6-ம் தேதி மதுரைக்கு வந்து சேருகிறேன். நீங்கள் 7-ம் தேதி மதுரைக்கு வரவும். ஒருவர் பின்னொருவராக வந்தால் தான் இளிச்சவாயருக்கு ஒன்றும் வாய் பேச வகையில்லாமல் செலவுகளைச் சமாளிக்க முடியும். முள்ளங்கிமோத்தை.

### 10

அன்புள்ள அண்ணாவுக்கு,

நாங்கள் மதுரையில் அழகர் உற்சவம் பார்க்க ஆசைப்படுகிறோம். நீங்கள் திருநெல்வேலியிலிருந்து திரும்பும்போது இரண்டு நாள் மதுரையில் தங்கினால் நாங்களும் தங்கள் ஜாகையில் இறங்கிப் பெருமாளையும் ஸ்ரீ மீனாக்ஷியையும் சேவித்துவிட்டுத் திரும்புகிறோம். உடனே பதில் எழுதவும்.

தங்கை மூக்காயி

### 11

பிரியமுள்ள மூக்காயிக்கு,

நீ 8-ம் தேதி மதுரை மாசி வீதி இளிச்சவாயரின் வீட்டிற்கு வரவும். 13-ம் தேதி எல்லோரும் ஒன்றாக மதுரையிலிருந்து புறப்படலாம். வீட்டிலுள்ள எல்லோரையும் அழைத்துக் கொண்டு வரவும். முள்ளங்கிமோத்தை.

ஃ

மேல் கடிதங்களின்படி முள்ளங்கிமொத்தையார் 6-ம் தேதி காலை இளிச்சவாயரின் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். தன் நண்பரை இளிச்சவாயர் மிக உபசரித்தார். மறுநாட் காலையில் முள்ளங்கியாரின் பிள்ளை கருப்பையா தன் சம்சாரம் குழந்தைகளுடன் வந்திறங்கினான். இளிச்சவாயர் சந்தோஷத்துடன் அவர்களையும் வரவேற்றார். பலத்த விருந்துகள் நடந்தன. அதற்கு மறு

நாள் மத்தியானம் மூக்காயி அம்மாள் தன் கணவன் மாமி குழந்தைகளுடன் ஏழுபேராக வந்திறங்கினுள். முன்னங்கிமொத்தையார் எதும் தெரியாதவர் போல், "ஸ்வாமி உத்ஸவம் சேவிக்க வந்தீர்களா?" என்று விசாரித்தார். இளிச்சவாயர் பாடு பெரிய சங்கடமாய்விட்டது. பாவம்! அவர் கையில் பணமும் இல்லை. வாய் திறந்தாலோ விரோதம் வந்து விடும். பல்லைக் கடித்துக் கொண்டு கடைகளிலெல்லாம் கடன் வாங்கி விருந்துகளை விமரிசையாக நடத்தினுர். வந்தவர்களும் ஒரு வாரம் போல் தங்கியிருந்துவிட்டுப் புறப்படுகையில் இளிச்சவாயரின் குழந்தைகட்கு அதிக அன்புடன் காலணு (!) வீதம் கொடுத்துவிட்டுப் பிரயாணமாயினர். இளிச்சவாயர் பட்ட பாட்டில் அவர்கள் புறப்பட்டுப்போன அன்றிரவே கனத்த குளிர்ஜ்வரம் வந்து விட்டது!

---

## III ஜகன் மோஹன ஆனந்த நாடக சபா

### 12

ஸ்திரீபார்ட் ராம் தேவுக்கு,

தஞ்சாவூரில் நான்கு ஆட்டங்களுக்கு ஏற்பாடாயிருக்கிறது. இந்த நான்கு ஆட்டங்களுக்கும் கம்பெனியின் புதுப்பெயர் ஜெகன்மோஹன ஆநந்த சபா ஆகும். தாங்களும், ஆர்மோனியம் அரணை ஐயரும் உடனே புறப்பட்டு வரவும். தஞ்சையில் நீலாம்பாள் வீட்டு மெத்தையில் இடம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

இராஜபார்ட் பீமாபிள்ளை.

### 13

விதூஷக ஜெயராம் பிள்ளைக்கு,

தஞ்சையில் நான்கு ஆட்டங்களுக்கு ஏற்பாடு. சில்லரைப்பார்ட் சின்ன ஐயரையும், ஸ்திரீபார்ட் ஜெகதாம்பாளையும், பாலாம்பாளையும், காமாக்ஷியையும் அழைத்துக்கொண்டு நீலாம்பாள் வீட்டிற்கு உடனே வந்து சேரவும்.

இராஜபார்ட் பீமாபிள்ளை.

### 14

அன்புள்ள பீமாபிள்ளை அவர்கட்கு,

எனக்கு ஹோட்டல் பாக்கியும், மற்ற சில்லரைக் கடன்களுமாக ரூபாய் 70-வரை பாக்கி. இது கண்டதும் ரூபாய் 40-அனுப்பினுல் இரவு மெயிலில் புறப்பட்டு வருகிறேன்.

ஸ்திரீபார்ட் ராம்தேவ்.

### 15

ஸ்திரீபார்ட் ராம்தேவுக்கு,

இத்துடன் ரூபாய் 40-மணியாடர் செய்திருக்கிறது. உடனே கட்டாயம் வந்துசேரவும்.

இராஜபார்ட் பீமாபிள்ளை.

## 16

ஸ்ரீமான் பீமா பிள்ளை அவர்கட்கு,

சில்லரைப் பார்ட் சின்ன ஐயரை ஐம்பது ரூபாய் கடனுக்காக நேற்று வாரண்டில் பிடித்துவிட்டார்கள். ஆனதால் உடனே தந்தி மணியாடரில் ரூபாய் ஐம்பது அனுப்பினால் வாரண்டிலிருந்து விடுவித்து அழைத்து வருகிறேன். காமாக்ஷியின் இருப்பிடம் தெரியவில்லை.

விதூஷக ஜெயராம் பிள்ளை.

## 17

உடனே பீமா பிள்ளை தந்திமணியாடரில் 50-ரூபாய் அனுப்பினார்.

ஃ

இவ்விதமாக எட்டுப் பக்கங்களிலிருந்தும் புறப்பட்டுத் தஞ்சாவூரில் ஒன்று கூடி, (1) பலே ஷோக் சதாரம், (2) வள்ளி திருமணம், (3) அரிச்சந்திர மாயான காண்டம், (4) சாரங்கதரா—நாடகங்களை நடத்தி உலகுக்கு உபதேசம் புரிந்து விட்டு, வசூலான பணத்தை வீதாசாரப்படிப் பங்கிட்டுக் கொண்டு, அந்த ஊரில் சிலரிடம் கடனும் வாங்கி, அதைத் திருப்பிக் கொடாமலே இரவு பன்னிரண்டு மணி வண்டியில் எல்லோரும் அவரவர்களின் ஊருக்குப் புறப்பட்டு விடுகிறார்கள். இந்த ஊர் ஆட்டத்துடன் ஜெகன் மோஹன ஆநந்த நாடக சபா கம்பெனி முடிவு பெற்று விடுகிறது. இனி அடுத்த மாதம் மற்றோர் ஊரில் ஆட்டம் தொடங்குகையில் வேறுவிதமான புதுப் பெயருடன் கம்பெனி புதுவிதமாய் ஆரம்பமாகி நான்காம் நாள் பூர்த்தி பெறுமாம்.

### ஒருவரது படத்தில் பிரீதி தவறுதல்.

ஒரு பொட்டகிராப் படத்தை எவ்வளவோ அன்பும் அருமையுமாக நினைத்துப் பெற்றது ஒரு காலம். இப்பொழுதோ அந்தப் படத்திலுள்ளவர் நம்மீது அன்பு மாறி வெறுத்தும் இகழ்ந்தும் ஒதுங்கியும் சென்றுவிட, நமக்கும் அந்தப் படத்திலுள்ள அபிமானம் தவறி விடுகிறது. அந்தப் படத்தை யொருவர் கேட்பின் உடனே எடுத்துக் கொடுத்து விடுகிறோம். நம்மீது பழய அன்பையே அப்படத்திலுள்ளவர் இப்போதும் கொண்டிருந்தால், அப்படத்தைக் கேட்டவருக்கு நாம் உடனே எடுத்துக் கொடுத்து விடுவோமா ? கொடுக்கத்தான் நமக்கு மனம் வருமா ?

## மூளைக்கு விருந்து.

1. ஜலத்திலுண்டான வஸ்து. ஜலமே அதற்குப் பகை—அது எது?

2. பெற்றோர்க்கு வலிமையற்ற காலத் துதவும் சற்புத்திரனெருவனர்?

3. பாரினில் காய்த்துப் பழுக்காத மரமெது?

4. காற்றாடி பறப்பதேன்? கல்வி வளர்வதேன்?

5. செந்நீர் வருவதேன்? சாம்பார் கமழ்வதேன்?

6. நளனும் தமயந்தியும் மகிழ்ந்ததேன்? நமர் தினமும் திடங்கொள்வதேன்?

7. ஒரு மாம்பழத்தின் விலை இரண்டணு; ஒரு பலாப்பழத்தின் விலை பன்னிரண்டணு; ஒரு புத்தகத்தின் விலை இரண்டு ரூபாய். ஒருவன் 100—ரூபாய்க்கு—100 உருப்படிகள்வாங்குகிறான். வகைக் கெத்தனை வாங்குகிறான்?

8. நடுவெழுத்து வினு:—1. அரசர்களில் ஒருவர் பெயர்; 2. தேவியின் பெயர்; 3. ஓர் நதியின் பெயர்; 4. சரீரப் பெயர்; 5. ஒரு தருவின் பெயர். இப்பெயர்களின் நடுவெழுத்தால் விநாயகர் பெயர் வரவேண்டும்.

9. மூன்றெழுத்திலோர் திசையின் பெயர்:—முதலெழுத்தில்லாவிடில் குதிரை; இடை யெழுத்தில்லாவிடில் வாள்; கடை யெழுத்தில்லாவிடில் ஆசைப் பெருக்கமாம். இப்பெயரெது?

10. ஒன்பது எழுத்திலோர் பெயர்:—அது மூன்று காலங்கட்கும் உதவும் செல்வமாகும் 4—8-ம், சேரில் தயிர்; 7—8-ம், சேரில் அரசமரம்; 5—8—3-ம், சேரில் பலதானியம் வைக்கு மிடம்; 4—9-ம், சேரில் ஒப்பின்மை; 2—5—8-ம், சேரில் அநேகம்; 1—8—8-ம், சேரில் புதியவர்; 5—9-ம், சேரில் வில்; 5—6—5-ம், சேரில் அலங்கை. இப்பெயரெது?

அரவக்குரிச்சி—எஸ். கே. பிச்சைமுத்து ராஜா.

### ஓர் உத்தம பத்தினியின் வேண்டுகை.

என்னென்ன வெல்லாம் எண்ணி வருந்தினேன்!
என் மனத் துன்பம் எத்தகைத் தென்று
சிறிதளவேனும் சிந்தித்துளீரோ?
அறிவீர் கொல்லோ அடியேன் மனத்தை!
அடிகளில் வீழ்ந்து அடியாள் என்றும்
அடிகாள்! 'உந்தம் அன்பினை இழவா
உறுதி' ஒன்றையே உம்பால் வேண்டுவல்;
'பெறுதி அதை' எனப் பேரருள் புரிவீர்.

# கடவுள் தந்த புது விழிப்பு

வஞ்சித்து வாழ்ந்தார் யார் வையக மீது
எனை உழைக்கவிட்டு மற்றவர் கூடியுண்டா
கூடி உண்டுவிட்டு பின் விலகித் துரோகமா
செய்த துரோகம் மறைத்து மயக்குவதா
சிரித்தே வஞ்சித்து 'சுண்ணாம்பு' தடவுவதா
கபட-ஏமாற்று ஒருநாளுமே விடியாது.
இனியும் ஏமாற்றவா ? தெய்வம் ஒப்புமா
சாமிதந்த புதுவிழிப்புஇதுகண்டுகொள்வே

மதிப்பு மானம்
போக்குவதா ?
குனியக் குனியத்
தலையில் குட்டு
வதா ? விழித்தே
எழுந்தவனை
மயக்க முடியுமா ?
..ன்பில் நம்பி
ஏமாறினோர்க்குக்
கடவுளின் அன்பு
உண்டு;உறுதியே.

எத்தனையோ பாடுபட்டேன் அன்புமிகுந்
எல்லா பாரச் சுமையும் குனிந்து தாங்கினே
என் மனிதரென உண்மையாக நம்பினே
பால்விட்டகாபியிலும் பால்மிக ஊற்றினே
வந்தவரவுக்கும் மீறியாவும் செலவிட்டே
என் நன்றியை மறந்து எனை மிதித்திடலாம
மிதித்ததைமறைத்துப்பசப்பிக் குலாவின
இனிக்கப் பேசியே நஞ்சூட்டுதல் நியாயம
தள்ளியதுபடுகுழியில்; தருவது லட்டுபூந்தி
கடவுளறிய தர்மம் நினைத்த பல னிதுவே
எவர் கை விடினும் ஈசன்உண்டு நெஞ்சமே

எவ்வளவோ கபடமாக எனை ஏமாற்றினே
தள்ளிய படுகுழி யறியாது மோசமானேனே
உழைத்தவனை உருட்டிய பாவம் விடுமா
வஞ்சித்த நீவிர் என்னலாபம் கண்டீர்களே
எதிர்ப்பவரைப் பணியேன்; இனி அஞ்சே
துணிவு தந்தார் ஈசன்; துணிவுக்கே வெற்




## இராஜாம்பாள் :—

[மூன்று படங்களுடன் கூடிய துப்பறியும் நாவல். வெள்ளி ஜூபிலி பதிப்பு. விலை அணா 12. ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்கராஜு அவர்கள் இயற்றியது.]

1907-ம் வருஷத்தில் சென்னையில் வாரம் மும்முறையான “வந்தேமாதரம்” பத்திரிகைக்குத் தலையங்கங்கள் எழுதுவோரில் ஒருவராக நாம் இருந்தபோது பத்திரிகா விமரிசனத்திற்காக வந்த “இராஜாம்பாள்” முதற்பதிப்பைப் பார்த்துப் பூரித்தோம். அதற்கு முன் இத்தகைய சுவை பொருந்திய நாவலை வாசித்ததில்லை யாதலின் நம் மனத்தை மிகவும் கவர்ந்தது. இப்பொழுது அதே ராஜாம்பாளின் 25-ம் பதிப்பைப் பார்க்கும்பொழுது, இன்னும் இது 50-வது பதிப்பும் பெற்றுத் தங்க ஜூபிலியும் கொண்டாடப் பெறுமென்றும் நிச்சயமாய்த் தோன்றுகின்றது. அதன் ஆசிரியர் அந்த நாவலை யமைத்திருக்கும் முறையின் வகை தமிழ் மக்களின் மனத்தை வசீகரிக்குந் தன்மையதாயிருத்தலின், சிறுவர் சிறுமியர் முதலாக அனைவரும் அதை ஆவலுடன் விரும்பிப் படிக்கின்றார்கள். பிரத்தியக்ஷ பூர்வமாய் நாடகத்திலும் கண்டு ஆநந்திக்கின்றனர். இராஜாம்பாள் நாவலுக்குத் தமிழ் நாட்டில் ஒரு தனியான கௌரவமும் பிரக்யாதியும் ஏற்பட்டுள்ளது. இதற்கு முன் எந்த நாவலும் 25-ம் பதிப்பைப் பெற்றதில்லை. முதல் பதிப்புடன் மறைந்துவிட்ட நாவல்கள் அநந்தம். இந்த 25-ம் பதிப்பானது இராஜம்பாள் நாவலின் மேன்மையையும், அதன் ஆசிரியரின் விடா முயற்சியையும் சிறப்பித்துக் காட்டுகின்றது. உண்மையாகவே இராஜாம்பாள் ஒரு அதிர்ஷ்டமான நாவலேயாகும். அதன் ஆசிரியர் நெடுங்காலம் சுகமே வாழ்ந்து “ஜெயரங்கன்” “டாக்டர்விஸ்வநாத்” போன்ற இன்னும் அநேக அபூர்வ நாவல்களையும் இயற்றி வெளியிட்டுத் தமிழகத்தை மகிழ்விப்பாரென்று எதிர்ப்பார்க்கின்றோம்.

## அனுபவ அஸ்தரேகை சாஸ்திரம்:-

[ஸ்ரீமான் சக்திதாஸன் அவர்கள் இயற்றியது. அநேக படங்களுடன் கூடியது. டிம்மி 1x8-ல் 200-பக்கங்களுள்ளது. விலை ரூபாய் 2.]

இந்நூலைச் சிரத்தையுடன் வாசிப்பவர்கள் அதில் இலை கனி காய் போன்று மறைந்துள்ள சாஸ்திர மர்மங்களை யறிந்து நிபுணர்களாவார்கள். ஒவ்வொரு விஷயத்தையும், ரேகைகளின் அமைப்பு நுட்பத்தையும் படங்களின் மூலமும், தனியே வியாக்கியானங்களின் மூலமும் வெகு தெளிவாக விளக்கியுள்ளது. இந்நூலை வரைவதற்கு இதன் ஆசிரியர் அதிகமான பிரயாசை எடுத்துக் கொண்டிருப்பதன்றி, ரேகை சாஸ்திரத்தில் தமக்குள்ள பாண்டித்தியத்தையும் நூலின் வழியே நன்கு புலப்படுத்திச்

---

கைக்குழந்தைக்குள்ள மனோநிம்மதியும், சமாதானமும், உல்லாசமும், பூரிப்பும் உலகின்கண் எந்த செல்வத்தாலும் பெற இயலா.

சென்றுள்ளார். அஸ்த ரேகை சாஸ்திரத்தில் வல்லுனராய் மேல் நாட்டில் பல மேதாவிகள் இருந்து வந்திருக்கின்றனர். இன்றும் இருக்கின்றனர். இன்னோர் சாஸ்திர வாயிலாக நன்கு கற்றுணர்ந்த பெரியோர்களாதலின் அவர்கள் தெரிவிக்கும் விஷயங்கள் அப்படியே அனுபவத்திலும் நடப்பதால் அவர்களின் வாக்குக்கு அதிக மதிப்பேற்படுகின்றது. நம் நாட்டிலோ குடுகுடுப்பைக்காரர்களிடமும் கல்லாதாரிடமும் ரேகை சாஸ்திரம் சிக்கிக்கொண்டு கேவலப் பட்டுள்ளது. நமது தலையில் எழுதிய எழுத்தை யறியாவிடினும் உள்ளங் கையில் சித்தரித்துள்ள ரேகைகளைக் கொண்டே நமது ஜீவிய நிகழ்ச்சிகளை ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். அதற்கான பயிற்சியை இந்நூலாற் பெறவது கூடுமாதலின், ஆராய்ச்சியிற் பிரீதியுள்ளவர்கட்கு இது விசேஷமாகப் பயன்படுமென்று நம்புகிறோம். அனுபவ பூர்வமாய்ப் பிரதி யொரு விஷயங்களையும் விவரித்துச் சென்றிருப்பது இந்நூலின் முக்கிய விசேஷமாகும். நூல் வாசிக்குந்தோறும் மிக்க உத்ஸாகம் உண்டாகின்றது.

[இந்நூல்கள் "அமிர்த குணபோதினி" ஆபீஸில் கிடைக்கும்.]

## இங்கே இப்படி, அங்கே அப்படியா?

இந்த வீட்டுக்கு விருந்தாளியாக வந்து விட்டவர்கள் இவ்வீட்டுக்காரனை வெகுவாய்க் கௌரவித்துத் தாங்குகிறார்கள். அவன் சொல்வதற்கெல்லாம் "ஆமாம்" என்று பாட்டு பாடுகிறார்கள். அவன் அணிந்துள்ள உடைகளை எங்கு வாங்கியது, வெகு நன்றாக இருக்கிறதே என விசாரிக்கிறார்கள். பேஷ் கதாரா இது, அச்சா! அப்படித்தான் இருக்க வேண்டும் என்று பேசி வீட்டுக்காரனை ஆகாசத்தில் உயர்த்துகிறார்கள். வெகு மரியாதையாக நடந்து கொள்கிறார்கள். வீட்டுக்காரனும் இந்தப் போலி மரியாதைகளை நோக்கித் தன்னுள் சிரித்துக் கொள்கிறான். அவர்களும் இவனை மயக்கி விட்டதாய் நினைத்துக் கொள்கிறார்கள். பிறகு ஒரு சமயம் இவ்வீட்டுக்காரன் அவ்விருந்தாளிகளின் வீட்டிற்குச் சென்றாலோ, 'வாருங்கள்' என்பதைத் தவிர வேறு கவனிப்பதையே காணோம். பேசவும் நேரங் காணோம். அலக்ஷியமாய் ஜாடையாக ஒதுங்கி இருந்து விடுகிறார்கள். இங்கே இப்படி! அங்கே அப்படியா?

ஒருவர் தன்னை அவமதித்ததை யுணர்ந்தும் பிறகுங்கூட அவரையே சுற்றிக்கொண்டு நிற்பதாயின், அவரால் ஆகவேண்டிய ஒரு காரியத்திற்காக அது இருக்கலாம். அவ்வளவேயன்றி தான் அவமதிக்கப் பட்டதை அவன் மறந்து விட்டவனல்ல. மறவாமல் பிறகு கெடுதியும் செய்யலாம்.

| | | |
|---|---|---|
| விவேகம்<br>விநோதம்<br>விசித்ரம்<br>விகடம் |  | அநுபவம்<br>அற்புதம்<br>ஆச்சரிய<br>ஆநந்தம் |



# ஆடியடா அண்ணேன் ஆடி! ஆடி!!

## II

## விகடன் புறப்பட்டுக் கொண்டேனப்பா!



பழங்காலத்து விகடனய்யா! பல்லு பல போன விகடனய்யா! உள்ள கால மெல்லாம் ஊருக்கு உழைத்து உச்சிக்குடுமி யாவும் உதிர்ந்து விட்ட விகடனய்யா! நரைத்த தலையானாலும் முறைத்துப் பார்க்கிற எழுதுகோலை விடாத விகடனய்யா! எதிர்த்தவர்களை எந்த நாளையிலும் மறவாத விகடனய்யா! இராஜமார்த்தாண்டகம்பீரமகாவீர விகடப்பிரதாபனய்யா! பேரு பெருமை முழநீளம்; நல்ல சோறு கறி வரவு காணோமய்யா! விகடப் புறப்பாடு பாருங்கோ! விகட தாத்தாவுக்குக் கும்பிடு போடுங்கோ! அதோ பார் முதலிலே போகிறது விகடக்கொடியுடனே நாலு யானைகள்! பின்னாலே குதிரைகள்! அப்பாலே ஒட்டைகள்! அதற்கு இப்பாலே மேள தாள நாகசுர வித்வக் கூட்டங்கள்! அதற்கு அடுத்த படியில் விகட விலாஸத் திருக்கூட்டத்தாரின் விகட அநுபவ ஞான பாராயணம்! அதற்கு அப்பாலே விகடக் கட்டியக்காரர்களுடனே முத்துப் பல்லக்கிலே விகடனுடைய ஆரோகணிப்பு! விகடனுடைய வாலுக்குப் பின்னாலே அவனைப் பழிக்கிற-சுண்ணாம்பு தடவுகிற-விசுவாசக் கொக்குகளின் பாராயணம்! அதையும் தாண்டினால் விகட ஜெய பேரிகையின் முழக்கம்! விகட பீரங்கிகளின் வேட்டுகள்! ஃ

விகடன் புறப்பாடு ஆச்சுதா! இனி, "ஆடி" களின் அடுக்கான புறப்பாட்டைப் பாடி மூடிவிடுகிறேன்! நாடிக் கூடிக் குந்திக் கேளுங்கள்! இந்தத் தடவைக்கு ஆடிகளின் சங்கதியிலே முதல் நெம்பராய்ப் புறப்பட்டுக் கொண்டது காற்றடி! இதைப் பற்றி முன்னே கொஞ்சம் முழக்கியிருந்தாலும், இப்போது விகடன் புது மோஸ்தரிலே தமாஷான வழியிலே சற்று அவிழ்க்கிறேன்! குளம்-குட்டை-ஏரி-மதகு-ஓடை முதலானவைகளின் கரை யோரத்திலே ஒருவர் நின்று கூர்ந்து கவனித்தால் காற்று எங்கெந்தப் பக்கம் வீசுகிறதோ அந்தந்தப் பக்கமும் அந்த குளத்து நீர் அலையை ஒதுக்கிக் கொண்டிருக்கும்! காற்றடிக்கிற வழியிலே அலையும் சாயும்! இது போலவே உலகத்தில் அநேக மனிதர்கள் ஒரு ஸ்திரமான புத்தி, ஒரு ஒழுங்கான போக்கு, ஒரு நிச்சயமான உறுதி வார்த்தை, ஒரு நிலையான பிடிமானமுள்ளவர்களா யில்லாமல் காற்றில் அடிபடுகிறவர்கள் போல ஆடுகிறவர்

களா யிருக்கிறார்கள்! இந்த ஆடிக ளிலே முதல் தரம்—அநேகமாய் வாசித்தும், பேர் பெருமைகள் பெற்றும் பட்டங்கள் வாங்கியும் நல்ல அந்தஸ்தோடும் வாழுபவர்கள்! இவர்கள் இன்றைக்கொரு கட்சி, நாளைக்கொரு கட்சி, அன்றைக்கொரு பேச்சு, இன்றைக்கொரு கொள்கை, நாளைக்கொரு கொள்கை, இன்றைக்கொரு வாதம், நாளைக்கொரு வாதம், சில தினங்கள் பொறுத்து முன்னைய கட்சி தான்—முன்னைய கொள்கை தான் சரி என்று பேசுவார்கள்! இவர்களுக்கு கட்சி பேரம் பண்ணவும் ஆள் (மந்தை) சேர்க்கவும் ஏற்படுகிறவர்களோ தங்களுக்கு வருகிற துட்டுப்புக்கு ஏற்றதுபோல நேற்று அவருக்காக உயர்த்தி உயர்த்திப் பேசியிருந்து, இன்றைக்கு இந்த இடத்தில் அதிகத் துட்டு கிடைக்குமென்று தோன்றவே, அவன் கெட்டான் தரித்திரப் பயல், இவராலே அநேக காரியங்கள் கைகூடும், இவர் வாக்கு பரலோகத்திலும் போய் எட்டி முட்டி அங்கிருக்கிறவர்களைக் கூட அசக்கிப் போடும் என்று வாசால பேரம் பண்ணும் சின்ன ஆடிகள்! இன்றைக்கு இந்த இடத்தில் வேலைக்கிருந்து அந்தக் கடைக்காரனைக் கேவலமாகப் பேசுகிறது! நாளைக்கு அந்தக் கடைக்காரனிடமே வேலைக்கு மாறிக்கொண்டு இந்தக் கடைக்காரனைப் பற்றி மெத்த இழிவாகப் பேசுவதுடன் கெடுதியும் செய்யத் தலைப்படுகிறது! போட்டிக்கடை வைக்கும்படியும் தூண்டி விடுகிறது! ஒரு வியாஜ்ஜிய சங்கதியிலே இன்றைக்கு வாதி பக்கம் இருந்து எதிரியின் சங்கதிகளையெல்லாம் சொல்லுகிறது! பிறகு அடுத்த வாரத்திலோ மாதத்திலோ பிரதிவாதியின் மனுஷனாகிக்கொண்டு வாதியைப் பற்றிக் கண்டபடி தூற்றுகிறது! அவன் உளவெல்லாம் வெளியே அளக்கிறது. இன்றைக்கு இங்கே இலையில் கொட்டிக்கொண்டு விழுங்கும் வரையில் இவன் பக்கமே தாங்கிப் பேசி நிற்கிறது! நாளைக்கு அவர்கள் வீட்டுக்குப் போய் அங்கு ஜாகையும் புசிப்பும் ஏற்பட்டுவிட்டா... அவர்களின் கையாளாகிக்கொண்டு முன்னமே அன்னமிட்டு ஆதரித்தவர்களை அவர்களின் பவிசி தெரியாதோ வென்று கண்டபடி இழிவுபடுத்தி ஊரெங்கும் பறைசாற்றுவது! இந்த வீட்டில்வேலைசெய்தவரையில் இங்கே மேளம் அடிக்கிறது! அந்த வீட்டில் வேலை செய்தவரையில் அங்கே மேளம் கொட்டுகிறது! இவ்விதம் ஒரு நிலையில்லாமல் அங்கும் இங்குமாக ஆடிக்கொண்டிருக்கிற இந்தக் காற்றாடிகள்எவ்வளவுதான் தங்களின் கைக்கு வந்தாலுங்கூடத் தரித்திரப் பஞ்சைகளாகவே என்றைக்கும் இருந்துவருவதும் ஒரு வேடிக்கைதான்!

ஃ

நாளைக்கு ஒருவனை இன்ன மணி நேரத்திற்கு வாவென்பது! அதை நம்பி அவன் வருகிற வேளைக்குத் தான் இல்லாமலே போய்விடுவது! பணத்துக்காக வந்து அலைகிறவனை நாளைக்கு உன் பாக்கியை மூன்று மணிக்குக் கொடுத்துவிடுகிறேன், தவறாமல் வந்து வாங்கிக்கொண்டு போய்விடு, வரத்தவறினால் பணம் செலவாகிவிடும்—பிறகு அடுத்த மாதம்தான் தரும்படியிருக்கும்—ஆனதால் நாளைக்கே அவசியம் வா—

---

ஒரு விசேஷத்தின்போது எல்லா பெண்களும் வீட்டினுள் ஒன்று சேர்ந்து நீராடுகையில், எவரும் போகக் கூடாத அந்த இடத்துக்கு ஒரு ஆண் மகன் போகிறான். அவனைத் தடுப்பாருமில்லை; கண்டிப்பாருமில்லை. அவன் யார்?—பால் குடிக்கும் குழந்தையே.

என்று வெகு நம்பிக்கையாகச் சொல்ல, அதைக் கேட்பவனும் ஸந்தோஷமாய்ப் புறப்பட்டுப் போய் மறுநாள் குறித்த வேளையில் வந்தால், அந்த சமயத்தில்தான் மாடிமீதிருந்த படியே மறைந்துகொண்டு—அவர் இப்போதுதானே வெளியில் போனுர்—என்று ஆளைக்கொண்டு சொல்லி அனுப்புகிறது! வந்த ஆள் இதை நம்பாமல் மெதுவாக மாடி ஏறிவந்து ஐயாவைப் பார்த்துவிட்டாலோ பல்லைக் கடித்து சமாளித்துக்கொண்டு நாளைக்கு அவசியம் தந்துவிடுகிறேன்—இதுதான் கடைசி வார்த்தை என்று தட்டிக்கொடுத்து அனுப்பி விடுகிறது! இத்தகையோரெல்லாம் காற்றடிப் பேச்சுக்காரர்கள் ஆவார்கள்! இவர்கள் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமுமாய் அசைந்தாடுகிற காற்றுடிகள்! ஃ

இந்த ஆடிகளின் பேச்சுகளுக்கும் மத்தளம் கொடுத்துக் கூட ஆடுகிற கூட்டாடிகளோ இந்தக் காற்றுடிகளுக்கு மேலே வாயைப் பிளப்பார்கள்! அவர்தான் சொல்லுகிருரே, நாளைக்கு வாருங்கோ, வந்து வாங்கிக் கொண்டு போங்கோ என்று காற்றுடிகள் பக்கமாகப் பேசுவார்கள்! கடைசியில் இந்தக் கூட்டாடிகளின் வாயிலும் மண்ணைப் போட்டு விடுகிற பக்கா காற்றுடிகளும் உண்டு! சில பையன்கள் வீடு வாசல் மூதலானதை விட்டுப் போட்டுக் காற்றடித்துக்கொண்டு போய் விட்டது போல பேர் ஊர் இல்லாமலே பரதேசம் ஓடிப் போகிருர்கள்! அப்பால் எந்தக் காபி-ரப்பர்-தோட்டத்திலாவது,கூலிகள்பிடிக்கிற கங்காணி அண்ணுத்தைகளிடமாவது சிக்கிக்கொண்டு அல்லோகல்லோலப்பட்டு அங்கலாய்த்து உருவழிகிருர்கள்! பெண்களிலும் சிலர் ஒரு புருஷனேடு வாழ்ந்திருந்து, அவன் சற்றே கைவறண்ட காலத்தும், நோய்ப்பட்டு விட்ட காலத்தும் அந்தக் கஷ்டமான காலத்தைத் தாங்கிக் கொண்டிருக்க முடியாமல் அவனை விட்டு விட்டே ஓடிப் போகிற காற்றுடிகளாகிருர்கள்! இது எல்லோருமல்ல; உலகத்தில் அநேக உத்தமிகள் சமுத்திர அலையானது எவ்வளவு பலமான காற்றடித்தாலும் அதற்கு அசையாமலும் எல்லை மீறுமலும் கரை தாண்டாமலும் ஒரே நிலையாய் அலையடித்துக் கொண்டிருப்பது போல—புருஷனேடு எவ்வளவு துன்பமடைய நேர்ந்தாலும், வயிற்றுக்கே திண்டாட்டமானுலும் சகித்துக்கொண்டு வீட்டு ரகசியத்தை வெளியில் விடாமல் கௌரவமாய் மஞ்சள் குங்குமத்தோடிருந்து கஷ்டத்தோடேயே—அதைக் கஷ்டமென்று எண்ணுமலேயே வாழ்கிருர்கள்! இத்தகைய பதிவிரதா ரத்தினங்களை விகடன் என்றென்றைக்கும் கையெடுத்துக் கும்பிடுகிறேன்!

ஃ

சிலர் சிநேகனேடு சிநேகமாய் ஒரு பத்தெட்டு நாள் சிநேகிக்கிறதும், அப்பால் அவனை விட்டுப் போட்டு இன்னெருவனேடு சிநேகிக்கிறதும், இவனிடம் முன் சிநேகனுடைய ரகசியமான சங்கதிகளை யெல்லாம் சொல்லிக் காட்டி விடுகிறதும், இப்படியே ஒருவனை விட்டு ஒருவனை நேசித்துக் கொண்டு ஜீவிக்கிற காற்றுடிகளும் உண்டு! சிலர் சோற்றுக்கோ துணிக்கோ, உத்தியோகத்திற்கோ, பெண் ஜாதிக்கோ, பெருமைக்கோ, இழிந்த

---

ஒருதினத்துப் பொழுது போவதற்குப் பணப்பையை எத்தனையோ தடவை திறக்கவேண்டியிருக்கிறது. பணத்தைப் போடுவதற்குத் திறக்கும் போது அதிக சந்தோஷம். செலவிடத் திறக்கையிலோ கனத்த கஷ்டம்!

ஜாதியை உயர்த்திக் கொள்வதற்கோ, மற்றும் என்னென்ன சிலாக்கியத்துக் கோ பழைய கடவுளை விட்டுப் புதிய கடவுளிடம் போய் புதுமனுஷ்யனாகப் போகிற பெருமையாக மதம் விட்டு மதம் ஓடுகிற காற்றாடிகளாகிறார்கள்! சிலர் இன்றைக்குப் பக்கிரி—நாளைக்கு நவாப்பு— அடுத்த நாளைக்கு மறுபடியும் பக்கிரியாய் விடுவதான உருவ் தண்டக் காற்றாடிகளாயிருக்கிறார்கள்! துட்டிருந்தால் உயர்ந்த ஜாதியாக நடித்தும், துட்டு போனால் பழைய கறுப்பன் நானென்று பேரெடுக்கப் படுகிற காற்றாடிகளு மிருக்கிறார்கள்! இன்னும் சில ஆண்களும் பெண்களும் காலையிலொரு புத்தியாயும், சமைத்தோ—வேலை செய்கையிலோ ஒரு புத்தியாயும்—புசிக்கும் தருணத்தில் ஒரு பத்தியாயும் ஒரு நிலையில்லாத காற்றாடிகளாய்க் கிடக்கிறார்கள்! இப்படியே விகடன் சொல்லிக்கொண்டேபோனால் இந்த வர்க்கத்திலே எவ்வளவோ ஆயிரம் காற்றாடிகளுண்டு!

ஃ

இனி "அண்ணாடி"களின் சங்கதியைத் தொட்டுக் கொள்கிறேன். இந்த அண்ணாடிகள் எங்கு இருப்பார்களென்றால், அங்கேயும் இருப்பார்கள்! இங்கேயும் இருப்பார்கள்! ஆக்கின சோற்றுக்குப் பங்கும் இருப்பார்கள்! தின்று எழுந்த பிறகு தங்களின் தலையையே காட்டமாட்டார்கள்! அவசரம் ஆபத்து உதவிகளுக்கு எதிரே அகப்படவுமாட்டார்கள்! பிறகு எப்போது இவர்களைப் பார்க்கலாமென்றால் மறுபடியும் இன்னொரு வேளைத் தீண்டிக்கு இலை போடப் போகும் போது தான்! எந்தப் பக்கம் அசவு இருக்கிறதோ அந்தப் பக்கம் சாய்ந்திருப்பார்கள்! மாமன் கையில் அதிக பணமிருந்து மருமகன் வறண்ட கையாயிருந்தால் மாமன் பக்கம் சேர்ந்து கொண்டு அவன் மருமகனை எதிர்த்துக் கொள்வார்கள்! இவர்கள் பேசும் பேச்சோ வெகு சளுக்காய் பழம் நழுவிப்பாலில்விழுந்ததைப்போல் தான்!

ஃ

இந்த அண்ணாடிகளுக்கு ஒரு வேலை தான் தெரியுமென்பதில்லை! உலகத்திலுள்ள எல்லா வேலைகளையும் காரியங்களையும் தெரிந்து வைத்திருப்பது போல நடிப்பார்கள்! தவிர, இவர்கள் கம்பரிலும் உயர்ந்த—தலையிரண்டு கொம்பு முளைத்த வித்வான்களைப் போல் நடித்து மகா ஞானிகள் போல் வேதாந்தம் எல்லாம் பேசி வெகுமதிப்பைப் பெற்றுக் கொள்வார்கள்! நாளைக்கு நம்மை யார் என்ன திட்டினாலும் சரி—காரியுமிழ்ந்துகாதறுந்த செருப்பால் அடித்தாலும் சரி—அல்லது என்ன அவகேடு வந்தாலும் சரி—சாவு வந்தாலும் சரி—என்று எந்தவிதமான மோசத்தையோ, நாசத்தையோ, கம்பளி வேஷத்தையோ, டகல்பாஜித்தனத்தையோ, ஏமாந்தவர்களுக்குக் குல்லா போடும் பேமானித் தொழிலையோ—எதையாவது செய்து அன்றைப் பொழுதுக்கு வயிற்றுப்பாட்டைக் கழிக்க வேண்டியதற்கு ஆன ஏற்பாட்டைத் தேடிக் கொள்வார்கள்! ஃ

பின்னும் சில அண்ணாடிகள் அழையா வீட்டுக்கு நுழையா சம்பந்தியாய் எந்தக் காரியத்திலும் வலிய வந்து தலையிட்டுக் கொண்டு தட்டித்

---

கணவன் சொத்து வைத்துச் சென்றிருந்தால் பழைய வாழ்வில்தானே ஒரிது நான் காலந்தள்ளலாம். சொத்து இல்லாதவர்களோ தங்கள் கணவனுக்குப் பின் தாங்கள் பிழைக்கப் புதிய குடித்தனச் செட்டு வாழ்வைத் தொடங்க வேண்டியதே. காபி பலகாரம் கணவனோடு போய்விடலாம்!

தடுமாறி இதைத் தூக்கி அதன் மேல் வைத்து—அதைத் தூக்கி இதன் மேல் போட்டு—ஒரு செலவுக்கு இரு செலவு ஆக்கி—ஏமாந்த இளிச்சவாயனைக் கடன்கார கந்தப்பனுக்கி விட்டுப் பிரிந்து விடுவார்கள்! பிறகு கடன் கொடுத்தவர்கள் வந்து கேட்க, அவனிடத்தில் ஒரு காசும் இல்லாதது கண்டு, அவன் தலையைத் தடவி ஆளுக்கு நாலு திட்டு திட்டி வயிறு எரிய வேண்டியது தான்!

ஃ

இன்னொரு அண்ணாடிகள் கதை ஒரு தாமஷ்! அவன் உன்னை இப்படிச் சொன்னான், இவன் உன்னை அப்படிச் சொன்னான் என்று ஒவ்வொருபேச்சை ஒன்பதாய் முடிந்து, இந்தண்டைப் பேச்சை அந்தண்டை சொல்லி, அந்தண்டை பேச்சை இந்தண்டை சொல்லி இங்கொரு திரான் சாராயமும், அங்கு ஒருபுட்டி கள்ளும் இசைவாய் இலவசத்தில் குடித்து வசமாய் இருந்து வீண் சண்டை மூட்டி வேடிக்கை பார்த்து நடுவிலே துட்டை நன்றாய்ப் பறித்து, காபிஹோட்டலுக்குப் போனாலும், அல்வா—மைசூர் பாகு—சேமியாபாயஸம் முதலிய உயர்தரமானவைகளையே யுண்டு அதிகச் செலவுகளுக்கு வழி வைத்துக் கைரொக்கமும் பெற்றுக்கொண்டு தங்கள் தொப்பையை நிறப்பிக் கொள்வார்கள்!

ஃ

வேறு சில அண்ணாடிகளோ—ஒவ்வொரு ஊராகச் சுற்றித்திரிந்து எதிர்ப்படுகிறவர்களுக் கெல்லாம் ஊளைக்கும்பிடு போட்டு ரொம்ப நாள் சிநேகிதர்போல் காட்டி வீடு வீடாய் நுழைந்து 'பதம்' பார்த்து எந்த வீட்டில் அப்பனுக்கும் மகனுக்கும், தாய்க்கும் மைந்தனுக்கும் தம்பிக்கும், மாமனுக்கும் மச்சானுக்கும், புருஷனுக்கும் மனைவிக்கும், கொண்டானுக்கும் கொடுத்தானுக்கும் சண்டை எங்கே யென்றும், பங்காளிக்குள் சண்டை எங்கே யென்றும், எங்கே வீட்டு வழக்கு—நிலத்து வழக்கு—தோட்ட வழக்கு—துறவு வழக்கு—கோர்ட்டு வழக்கு—போலீஸ் வழக்கு என்றும் தெரிந்து கொண்டு அங்கே நுழைவார்கள்! நுழைந்து, நான் அந்த கேஸை இப்படி ஜெயித்தேன், இந்தக் கேஸை அப்படிஜெயித்தேன், கோர்ட்டில் நான் காலை வைத்தால் எனக்குக் கும்பிடு போடாதவர்கள் கிடையாது, சில சமயங்களில் பாரிஸ்டர்களும் இந்த செக்ஷன் என்ன சொல்லுகிறதென்று என்னைக் கேட்பதும் உண்டு, அப்படிப்பட்ட ஜட்ஜி முத்துசாமிஐயரையே ஒருகேள்விகேட்டுவிட்டேன். அவர் அதற்கு மறுத்துச் சொல்லமுடியாமல் கல்பதுமை போல் உட்கார்ந்து விட்டார்; நான் சொல்வது பொய்யல்ல, ஐகோர்ட்டில் கேட்டால் தெரியும், அப்படிப்பட்ட எனக்கு இந்த சங்கதி எம்மாத்திரம்? இது ஒருசின்ன சங்கதி என்று வாயடி யடிப்பார்கள்! அப்போதே ஹைகோர்ட்டை எட்டிப் பிடித்து அப்பீலை எந்த வகையிலுமே ஜெயம் ஜெயம் என்று ஜெயித்துக் கொண்டு வந்து கொடுப்பதாகப் பேசுவார்கள்! அந்த வக்கீல் அப்படிச்சொன்னார்—இந்த வக்கீல் இப்படிச் சொன்னார்—அந்தலா சட்டத்தைக்கொண்டு அவனை அடியோடு நசுக்கிப் போடலாம்—காண்டிராக்ட் ஆக்ட் அப்படி, முனிசிபல் ஆக்ட் இப்படி—விட்டேனா அவனை—என்சுண்டு விரலுக்குக்கூட சரியில்லாதவனுக்கு இத்தனை திமிரா என்று மட மட மட வெனப்

---

ஸந்தர்ப்பத்தை யனுசரித்து ஒவ்வொரு இடத்துக்கும், ஒரு சிற்றறைக்கும் அளவிடற்கரிய மகிமை ஏற்படுகிறது. மனுஷ்யர்களுக்கும் அப்படியே.

பேசி அளப்பார்கள்! இந்தப்பேச்சில் எப்படிப்பட்டவர்களும் மயங்கிப் போவார்கள்!நன்ருக வாசித்துணர்ந்த அறிவாளிகள் கூட இவர்களின் அல்ப த்தனத்திற்கு அஞ்சி இவர்களின் வாய்ப்பந்தலுக்குள் நின்று இவர்கள் சொல்வதே சரியாயிருக்கலாமென்றும் எண்ணிவிடுவார்கள்! அந்தஸ்டாம்புக்கு இவ்வளவு பிடிக்கும், இந்த வக்கீலுக்கு அவ்வளவு கொடுக்க வேண்டும், அந்த குமாஸ்தா கையில் ஒரு பத்து ரூபாயா வது போட்டு வைத்தால்தான் நல்லது, என் பிரயாஸைக்கு நீங்களே மனம் வைத்துக் கொடுப்பதை வாங்கிக் கொள்கிறேன் என்று உள்ளதை உறிந்து வழக்கு நடுவிலே பறந்துப் போய்விடுவார்கள்! என்நஞ்சான் குஞ் சான்களே! இவர்களைப்பற்றி வெகு எச்சரிக்கையோடும் இருங்கள்! இவர் களின் கையில் சிக்கினீர்களோ உங்க ளின் வாழ்வுக்கு அந்த நிமிஷமே பெரிய ஆபத்து வந்தாற் போலத் தான்! ꣸

இன்னும் சில அண்ணுடிகளோ எங்கே வாழ்வோ, எங்கே சாவோ, எங்கே கல்யாணமோ, ருதுசாந்தியோ, கருமாந்திரமோ, கல்லெடுப்போ, சாது குத்தலோ, மூக்கு(வயிறு) குத்தலோ, என்று மோப்பம்பிடித்து, தான்வெகு சொந்தக்காரனைப்போல் காட்டி யாரும் கூப்பிடாமலிருக்கையிலேயே கடக் என்று உள்ளே நுழைந்து— அங்கு இருப்பவர்களைப் பார்த்து,— இப்படி நான் அந்தக் கல்யாணத்தை அரைப் பணத்தில் செய்து முடித் தேன்! இந்த சாவை ஒருகாசில் சுடலை கொண்டு போய்ச் சேர்த்தேன். வெளி யில் இருப்பவர் கல்யாணத்தை ஆயி ரம் ரூபாய்க்கும், சாவை நூறுரூபாய்க் கும் மதிப்பிட்டார்கள்; அப்படிசெய்ய உங்களால் முடியுமோ?—ஒருக்காலும் முடியாது; ஆகையால் இருக்கிற பணத்தை யெல்லாம் என்னிடம் கொடுத்துவிட்டுக் காரியம் எல்லாம் தீர்ந்த பிறகு பட்டி எழுதி உமக்குக் கணக்கு காட்டுகிறேன்; அப்பொழுது நீங்கள் என்னிடம் கொடுத்த தொகை களுக்குமேல் செலவாயிருந்தால் அத ற்கு நீங்கள் எனக்கு என்ன தான் கொடுத்து மரியாதை செய்வீர்களோ அது உங்கள் பிரியம் என்றும், நான் என்ன செலவு செய்தாலும் நீங்கள் குறுக்கு சொல்லாமல் மௌனமாயிரு ந்து அப்போதைக்கப்போது யான் என்ன கேட்டாலும் தடையின்றிக் கொடுக்கவேண்டும் என்றும் பேசி எத் தனையோநாளாய்ச் சேர்த்தபணத்தை தந்திரமாக வாங்கி, அதில் தன் வீட் டுச் செலவுக்கும் மணியார்டர்கள் செய்து விட்டு மற்றதைத் தன் இஷ் டம்போல் வீண் செலவுகள் செய்ய முற்பட்டு விடுவார்கள்! தப்பித்தவறி வீட்டார் கேட்டாலோ இந்த அண் ணுடிகள் வீட்டாரை நோக்கி—உங் கள் வீட்டில் நான் காலை வைக்கத் தகுமோ? கேவலம் உங்களுக்குமனுஷ் யாளுடைய அந்தஸ்து என்னதெரியும்? தரித்திரக் குடுக்கைகளின் வீட்டிலே காலை வைத்ததே பிசகு என்று எடுத் தெறிந்து பேசி அவதூறு செய்து கல கப்படுத்தி விட்டு அகப்பட்டமட்டும் சுற்றிக்கொண்டு—இனி எப்படியாவது போங்கள்—எக்கேடாவது கெடுங்கள் —என்று காரியத்தின் நடுவிலே அந் தரத்தில் விட்டுத்தலை மறைந்து கம்பி நீட்டி விடுவார்கள்! இந்த அண்ணுடி கள் ஒரு இடத்தில் மட்டுமல்ல, ஒவ்

---

மனைவி செய்யும் சமையல் வேலையை வீட்டுக்காரனே செய்ய முயலும் போதுதான் அதன் கஷ்டம் தெரியும். அவ்விதமே சம்பளக்காரன் செய்யும் வேலையை எஜமானன் செய்ய ஏற்படும்போது தான் அந்தத் தலைவலி பாரம் —பளுவு—திகைப்பு—எப்படியிருக்கிற தென்பதும் விளங்கும்.

வொரு இடத்திலும், தேசத்திலும், ஒவ்வொரு ஜாதியிலு மிருக்கிறார்கள்! இவர்களின்பிழைப்பைப்போல்சுகமானபிழைப்பு வேறு எதுவுமேயில்லே! அவர்களுக்கே தான் பல இடங்களிலிருந்து அழைப்பும் வந்து அவர்களும் ஒரு பெரிய நிர்வாக மனிதர்களாகப் பிறருக்குக் காட்டிக் கொள்கிறார்கள்! ஆனல், இப்படிப்பட்டவர்களுக்குக் கொஞ்சமாவது மானம்ஈனம் வெட்கஞ்சிக்கு இருக்கவே இராது!

ஃ

இது போகட்டும், கடைசியாக, இன்னொரு ஆடியைக்கொண்டு வரட்டுமா? அதுதான் குறம்பாடிகள். இந்தக் குறம்பாடிகள் ஒன்று இரண்டல்ல, ஒரேமாதிரியானதுமல்ல, பலவிதமான குறம்பாடிகளுண்டு. ஐயனே! முதலாவது வைத்தியக் குறம்பாடிகள்! இவர்கள் இரண்டொரு பஸ்பம் சூரணம் வேர்கள் பச்சிலேகள் வைத்துக்கொண்டு எந்த வீட்டில் நோயில் விழுவார்களோ எங்கே தன்னைக் கூப்பிடுவார்களோவென்று எதிர்பார்த்திருந்து கொண்டு வலியவாவது வீடு வீடாய் நுழைந்து உனக்கு சூடு, குளிர்ச்சி,பித்தம், வாயு, மேகவாயு, வெட்டைச்சூடு, உள் ஜுரம் என்று, இல்லாததும் பொல்லாததும் புளுகி பயங்காட்டி வேண்டாமென்றாலும் வாயில் மருந்தைப்போட்டு விட்டு ஒரு ரூபாயோ இரண்டு ரூபாயோ அகப்பட்ட மட்டும் தட்டு பிராய்ந்துபோய் தங்கள் தினப் பொழுதைக் கழிப்பார்கள்! எவர்களுக்காவதுஉயர்ந்த மருந்துவேண்டியிருந்தால்அவர்களிடம் பணத்தை பெற்றுக் கொண்டு, இன்னொரு வீட்டில் அவர்களுடைய நோயாளிக்கே மருந்தை இலவசமாகச் செய்து தருவதாகச் சொல்லி அங்கே அந்த மருந்தை வீட்டாரின் பாத்திரசாமான்கள் விறகுகள் எல்லாம்வாங்கிச்செய்துமுடித்து,இன்னும்பவளபஸ்பம் இத்துடன் கொடுத்தால் நல்லதென்று வீட்டுப்பெண்கள் பழயதாய்ப் பெட்டியில் போட்டுள்ள பவளமாலைகளையும் வாங்கிக்கொண்டு கடைசியில் மருந்தோ பஸ்பமோ எதுவுமே தாராமல்வைத்துவிட்டுத் தாங்கள் செய்தமருந்தில் பத்தில் ஒரு பங்கை முன்பு பணம் கொடுத்த பிச்சாண்டிக்குத் தந்துவிட்டுக் கம்பிநீட்டி விடுவார்கள்! இவர்களின் மோசங்களை எத்தனை ஆயிரம் பக்கங்கள் எழுதினாலும் முடியாது! தீராது!! கடைசியில் இவர்களையே நம்பவேண்டிய தலையெழுத்துச் சங்கடமும் வருகிறது!!

ஃ

இனி, சாஸ்திரம் சொல்லுகிற குறம்பாடிகள்! இவர்கள் உண்மையிலேயே திரிகாலக்கியானிகளைப் போல, இதைத் தூக்கி அதுமேலே போட்டு, அதைத் தூக்கி இது மேலே போட்டு, ஒரு ஜீவன் மேலே—ஒரு சொத்து மேலே—ஒரு கல்யாண சங்கதி மேலே—ஒரு வழக்கு மேலே—என்றுவாய்க்குவந்தபடிபுளுகிப்போட்டுஅரையணாவோ காலணாவோதட்டிப் போய் வயிறு வளர்ப்பவர்களாவார்கள்! இப்பால், ஜோஷியக் குறம்பாடிகள்! இவர்கள் உன் பேரென்ன என்று கேட்கிறதும், ராசிச்சக்கரம் போடுகிறதும், குரு குண்டியிலிருக்கிறான்—சனியன் தலைமேலேறியிருக்கிறான்—அங்காரகன் அடி வயற்றிலிருக்கிறான்—செவ்வாய் காபி ஹோட்டலிலே இருக்கிறது—புதன் புற முது

உத்தியோகஸ்தர்களின் வீட்டுக்குச் சென்று தங்களின் காரியங்களைச் சொல்லி சாதகப்படுத்திக் கொள்கிறார்கள். அதில் இவர்களுக்கு வெற்றி யிருக்கிறது. உத்தியோகஸ்தர்களுக்கும் அது வழக்கமான வீட்டு வரும்படி!

கிலிருக்கிறான்—சூரியன் உலை யண்டை யிருக்கிறான்—சந்திரன் தொடைப்பக்கத்திலிருக்கிறான்--ராகு கேதுக்கள் ராசியில் வருகிறார்கள்—என்றும், இவன் அவனைப் பார்க்கிறான் — அவன் இவனைப் பார்க்கிறான்—எல்லாம் ஜெயம்—எல்லாம் கொஞ்சம் — மூனு வாரத்திலே—மூனுமாசத்திலே— மூனு வருஷத்திலே—என்றும் புளுகிவிட்டு அரைப் பணமோ ஒருபணமோ தக்ஷிணைபெற்றுக்கொண்டு அதில் கஞ்சி காய்ச்சிக் குடித்து ஜீவிப்பார்கள்! இப்படியே, ஜாலவித்தைக் குறம்பாடிகள்! சந்தனக் குறம்பாடிகள்! சுவடிக் கயிறு குறம்பாடிகள்! சிலேட்டிலோ காகிதத்திலோ வீடு போட்டு பத்திலே ஒன்று சொல்லு என்கிற குறம்பாடிகள்! ஏழுமலையான்—வடக்கு மலையான் முருகர் பேரை வைத்துக் கொண்டு உண்டிப் பெட்டி தட்டு தண்டுகிற குறம்பாடிகள்! மாரியாத்தாள் நெருப்புச் சட்டி தூக்குகிற குறம்பாடிகள்! அன்னதானம் பண்ணுகிறது—தேர் எடுக்கிறது—பூஜை போடுகிறது — மடங்கட்டுகிறது—கோயில் கட்டுகிறது-குளம் வெட்டுகிறது-முதலான குறம்பாடிகள்! இதையும் விட்டாலோ, பெண்டாட்டி செத்தாள்—பிள்ளை செத்தது—சாவெடுக்கத்தருமம்—நான் இந்த ஊரிலிருந்து வந்தேன்—அந்த ஊரிலிருந்து வந்தேன்—இங்கே ஆதரவு யாருமில்லை—2-நாள் பட்டினி—3-நாள் பட்டினி—எப்படி யெல்லாமோ வாழ்ந்தேன், இக்கதியானேன்—என்கிற பாசாங்கு பண்ணி வயிறு வளர்க்கிற குறம்பாடிகள்! இதுவுமில்லாவிடில் வீடு வீடாய் நுழைந்து மெதுவாகப் பார்த்து யாரும் கவனியாத சமயமானால் சொம்பு குவளை பாத்திரம் துணிமணிகளைத் திருடிப் போய் வேறிடங்களில் 8-அணா விலை யுள்ளதை 2-அணா 3-அணாவுக்கு வந்த மட்டும் விற்றுப் போட்டுப் பதுங்கிக் கொண்டு தலை மறைந்து திரிகிற குறம்பாடிகள்! வேப்பிலை யடி—திருநீறு அடி—எலுமிச்சங்காய் ஓதுதல்—குளிசங்கட்டுதல்—முதலான குறம்பாடிகள்! குடுகுடுப்பைக் குறம்பாடிகள்! படித்து விட்ட பெருமையை வெளியில் காட்டிக் கொள்ளக் கிளம்புகிற ஆண் பெண் பிரஸங்கிக் குறம்பாடிகள்! இந்தப் பிரஸங்கிக் குறம்பாடிகள் அதில் என்னவோ பேரும் பிரஸித்தியும் பெற்று உயர்ந்த கௌரவம்தேடிக் கொள்வதாக நினைத்து ஆங்காங்குள்ள தெரிந்த மூஞ்சிகளைக் கொண்டு ஒரு சின்னவோபெரியவோகூட்டம்கூட்டுவித்து, எல்லாரும் கூடி விட்டார்களென்று தெரிந்த பின்பு, மோட்டாரிலோ கால் நடை வீச்சிலோ வந்து ஆகாயத்திலிருந்து குதித்தாற்போல இறங்கி அதையும் இதையும் பேசிவிட்டு அங்கே ஒரு நாளும், இங்கே ஒருநாளும் விருந்து தின்று விட்டு அதை ஒரு பிரமாதமாய் நினைத்து மயங்கிப் போவார்கள்! இதில் ஒரு வரும்படியையும் உண்டாக்கிக் கொள்ளப் பார்ப்பார்கள்! இனி, காங்கிரஸ் குறம்பாடிகள்! இவர்களிலேபலர்மஹா உத்தமர்களாக இருந்தாலும், சிலர் காங்கிரஸ் பேரைக்கொண்டேஅதற்கு வசூலாகும் பணத்தில் மோட்டாரும் தங்களுக்கு வாங்கிவிடுவார்கள்! தங்களுக்கு வேண்டிய அம்மாக்கள் ஐயாக்களுக்கும் பணம் பணமாகப் படியளப்பார்கள்! இனி சத்தியாக்கிரகக் குறம்பாடிகள்! உதை-குத்து-அடி, சிறை எல்லாம் இவர்களுக்கே

---

மேற் பூச்சாகிய தங்கமுலாம் எத்தனை நாளைக்குப் பளபளப்பாகக் காட்டப்போகிறது? மறைத்துவைத்த தன் பேய்க்குணத்தையே மற்றவர்கள் முதலில் அறிந்து விடுகிறார்கள். அந்தக் குணம் தெரிந்ததே பெரிய லாபம்.

யாக, இவர்களை வைத்து மேய்க்கிற மேல் பதவியிலுள்ள பெரிய பூசாரிகளோ எல்லாப்பெருமையும் தங்களுக்கே வைத்துக் கொண்டு பேரும் புகழும் பெற்று மீசையை முறுக்குவார்கள்! இனி, குடுகுடுப்பைக் குறம்பாடிகள்! பும்பும் பெருமாள் மாடு காட்டும் குறம்பாடிகள்! தொம்புரு கூத்துக் குறம்பாடிகள்! தாசிரி கூத்து குறம் பாடிகள்! பண்டாரப் பாட்டு குறம் பாடிகள்! சாமிகள் பாட்டு குறம்பாடிகள்! சந்நியாச வேஷக் குறம்பாடிகள்! குரங்காட்டி குறம்பாடிகள்! நல்லதங்கா பாட்டு-கோவிலன் பாட்டு பஞ்சபாண்டவர் பாட்டு-அரிச்சந்திரன் பாட்டு-வள்ளியம்மை பாட்டுக் குறம்பாடிகள்! இப்படிப்பட்ட, விகடனுடைய கிழட்டு நினைவுக்கு வராத எத்தனையோ விதக் குறம்பாடிகளெல்லாமிருக்கிறார்கள்! இவ்வளவு குறம்பாடிகளும் ஊரில் ஒரு பொருளை ஆக்குபவர்களல்ல; ஆக்கிவைத்த சோற்றுக்கு அழிவு செலவு காட்டி அபகரிக்கிறவர்களே தான்! இன்னும் கொண்டு வரட்டுமா ஆடிகளை! போதும் போதும்! இவ்வளவு வரைக்கும் இழுத்துக் கொண்டு வந்து காட்டியது போதும்! இத்துடன் ஆடிகளை முடித்து, அடுத்த மாதத்திற்கு என்னடா அப்பனே சங்கதி என்ற ஆராய்ச்சியிலே புகுந்து கொள்கிறேன்! போய் வரட்டுமா?—விடை தருகிறீர்களா? இந்த மாத முதற் கொண்டு உங்களுக்கு யாவும் வெற்றியாகி அதிர்ஷ்ட காலமாயிருக்கட்டும்! ராம்! ராம்! சுபம்! சு! !சுவாஹா!!!



நாம் உண்ணும் சோற்றை வங்க தேசவாஸிகள் வெறுக்கின்றனர். அவர்களுடைய போஜனம் நமக்கு இன்பமாயில்லை. இப்படியே உலகம் பலவிதம்.




### எது நன்று ?

1. எண்ணறக் கற்றும் எதுங் கிடையாதவன்—வண்ணாத் தொழி லில் வாழ்வது நன்று.

2. பாட்டுகள் பாடியும் பயனடை யாதவன்—மாட்டை மேய்த்து வாழ் வது நன்று.

3. பிரசங்கம் செய்தும் பெருமை பெருதவன்—ஒரு சங்கு பிடித்து ஊதுதல் நன்று.

4. சோம்பேரியான சோறு தின் ஞதவன்—சாம்பிணம்போல சஞ்ச சரிப்பது நன்று.

ஃ

வாங்கின கடனே ஏமாற்றிப்போடு கிறவனும், அநேகரிடம் ஆயிரம் பதி ஞயிரம் வாங்கிக்கொண்டு கொஞ்சம் நஷ்டம் வர்த்தகத்தில் வந்தாலும் பூராப்பணங்களுமே போய்விட்ட தெனக் கடை மூடுகிறவனும் சிறப்பு டனே வாழலாமாம் !

ஃ

ஆட்டுக்கடா சண்டையும், காலே யில் மேகம் கர்ஜிப்பதும், புருஷன் மனேவி சண்டையும்—முதலில் பிரமா தமாயிருந்து, பிறகு வரவர ஒன்றுமில் லாமற் போய்விடுமாம் !

ஃ

கூட்டத்தில் பேசிய பேச்சும், பேச்சு வீச்சில் கண்ட பெருமையும் மறுநிமிஷமே போச்சு போச்சு என்று சொல்லும்படியே இருக்குமாம்!

ஃ

ஒருவரை வயிறுகொதிக்கவைத்து ஏமாற்றிய பாவத்தைத் தன் அந்தியத் திலே தான் பட்டுவிட்டுத்தான் சாக வேணுமாம்! ஃ

பிறர் வீடுகட்கு வாரண்டுகள் ஜப்திகள் கொண்டுபோகிறவர்களின் வாழ்வு அந்த வீட்டாரைப்போலவே பிற்காலம் அலறும்படி முடியுமாம் !

ஃ

பூட்டு போனல் சாவி உதவாது, சாவியின்றிப் பூட்டு பயன்படாது. அப் படிப்போலவே முடிபோட்டுக்கொண் ட புருஷனும் பெண்டாட்டியுமாம்!

ஃ

எங்கெந்தக் கோயிலில் என்றென் றைக்குச் சுண்டல், வடை, பொங்கல் இலவசத்தில் கிடைக்குமென்பது பாகவதர்களுக்குத்தான் நன்ருகத் தெரியுமாம் ! ஃ

தனக்கு இருக்கிற பலஹீனம் தெரியாமல் எவனும் உட்படமாட் டானும் ! ஃ

அடங்கிநடக்கிறவரையிலுந் தான் எதிர்த்துத் தலைமேல் ஏறுகிறதாம் !

ஃ

சிலருக்கு என்ன செய்தாலும் அவர்களின் மாறிப்போன மனதுக்கு விசுவாசமே இருக்கிறதில்லையாம் !

ஃ

மகாத்மாஜீ லண்டனுக்குப் போவது புது கல்யாண மாப்பிள்ளே முதல் முதலாக மாமி வீட்டுக்குப் போவதுபோலிருக்குமாம் !

ஃ

எத்தனை மறியல்கள் நடந்து மூடி ஞலும் பிறகு ஒருநாள் என் கள்ளு சாராயக்கடைகள் திறக்கப்படுவது நிச்சயமென்று மதுரைவீரசாமி போட்டிப் பந்தயம் போடுகிருராம் !

---

# சென்றமாதம்

"குட்டி குலைத்து நாய்த் தலையின் மேல் வைத்தது போல" தங்களின் அல்ப புத்தியால் இரண்டொருவர் அக்கிரமத்தைச் செய்துவிட, அது தேசத்திற்கே பெரிய அபவாதமாயும் நிந்தையாயும் முடிகின்றது.

**அராஜக விபரீதங்கள்.**

வங்காள மாகாணத்தைச் சேர்ந்த செஷன்ஸ் ஜட்ஜி மிஸ்டர் கார்லிக் ஒருசண்டாளனால் கோர்ட்டு அறையில் சுடப்பட்டு ஆவி நீத்தார். பம்பாய் கவர்னரை மற்றொரு பாதகன்சுட்டு விட, அதன் குண்டு சட்டைப் பையிலிருந்த குறிப்புப் புஸ்தகத்தின் பித்தளை தகடுவரை சென்று அதற்கப்பால் போக முடியாததால், அவர் தெய்வச்செயலாக உயிர் தப்பினர். நாட்டிற்குக் கிடைக்கக் கூடியநன்மையும் இவ்வித கோரகிருத்தியங்களால் பாழ்பட்டு விடலாம்.

ஃ

"புற்றிலிருந்தும் ஈசல் புறப்பட்டது போல"ப் புதுக்கோட்டையில் திடீரென்று பல்லாயிரக்கணக்காக ஜனங்கள் திரண்டு தங்களுக்கு விதித்த அதிக வரியை எதிர்ப்பதற்காக ஸர்க்கார் கட்டிடங்களில் தீவைத்தும் கொள்ளையிட்டும் ஆர்வாரித்தனர். இப்பொழுது அதிற் சேர்ந்தோரெனப் பலர் கைதியாகி விசாரணையி லுள்ளார். பெரிய புத்தியின்றிச் செய்த சின்ன காரியமிது. மிருக பலத்தை எந்த அரசாங்கமும் ஒரு நிமிஷத்தில் அடக்கி விடும். மஹாத்மா கற்பித்த அஹிம்ஸா ஆத்ம பலம் ஒன்றுக்கு தான் அதிக சக்தி.

**புதுக் கோட்டையில் கலகம்**

ஃ

"இன்னும் இருக்கிறது தேருக்குள் சிங்காரம்" என்பதாக, மகாத்மாவின் லண்டன் பிரயாணம் ஒரு நிச்சயத்துக்கு வராமல் இன்னும் சிங்காரிப்பிலேயே இருக்கிறது. ஆகஸ்டு 15-ம் தேதி கப்பல் ஏறுவாரென்று நாளும் குறிப்பிட்டிருக்கிறது. பெண்ணின் கழுத்தில் மாங்கல்யம் விழுகிற வரையில் பெண் நிச்சய மில்லை யென்ற கதை போன்ற சங்கதி இது. மகாத்மா லண்டனில் செய்கிற காரியங்களைப் பொறுத்து இந்தியத்தாயின் புனர் ஜன்மமும் இருக்கும். கடைசியில், மகாத்மாஜீயின் புறப்பாடும் உறுதியாகிச்சென்று வெற்றியுடன் திரும்பி வர வேண்டுமென்று பிரார்த்திக்கின்றோம்.

**மகாத்மாவின் லண்டன் பிரயாணம்.**

ஃ

"தாயின் மணிக் கோடி பாரீர்" என்று ஸ்ரீபாரதியார் வாழ்த்தினர். இந்தப் பாடல் வரையப் பட்ட காலத்தில் கொடியின் ஊக்கம் அத்தனை உச்ச நிலையில் இருக்க வில்லை. ஸ்ரீ அன்னிபெஸண்டு அம்மையார் "ஹோம்ரூல் லீக்" தொடங்கியபோது அதற்கு ஒரு கொடியும் கொண்டு தடபுடல் செய்

**தேசீயக்கொடியில் புது திருத்தம்.**

தார். எதையும் ஆரவாரமாக முதலிற் காட்டி ஒதுங்கி விடுவது அம்மையாரின் சாதாரண வழக்கம். அப்படிப் போல இந்த ஹோம் ரூல்லீக் கொடியின் கதையும் சீக்கிரமே மறைந்தது. கடைசியில் காங்கிரஸ் சார்பில் ஒரு கொடி தேச முழுதும் வியாபகமாயிற்று. அந்தக் கொடிக்காக எவ்வளவோ எதிர்ப்புகள் நடந்துள்ளன. இப்போதுள்ள தேசீயக் கொடியில், தேசீயக் கொடி ஆழ்ந்த மஞ்சள் வர்ணமாயும், அதில் நீலவர்ணத்தில் ராட்டினமும், ராட்டின சக்கரம் கொடிமரத்தை நோக்கி யிருக்க வேண்டுமென்றும் தேசீயக் கொடி காரியக்கமிட்டி முடிவு எதுவும் வழக்கத்தில் வந்து பழகிய பிறகு வசீகரமுள்ளதாகிவிடும்.

## நீ—நீர்—நீங்கள்.



"நீ" என்ற பதம் சாதாரணத் தன்மையிலும், சரி சமானமுள்ளவர்களிடமும் வழங்கும்; அன்பு கொண்டும் சொல்லப்படும். "நீர்" என்பது பொதுவாக ஸம்பாஷணைகளில் மனக்கஙங்கமின்றிப் பேசப்படுவதுண்டானாலும், பெரும் பான்மையில் மிக்க இழிதன்மையுடன் பிரயோகிப்பதற்கே இது உபயோகிக்கப்படும் பதமாகும். "நீர்" என்ற பதத்திற்கு அமையும் இழிவான கருத்தையுணராத மௌடிகத்தாலும், அறியாமையாலும் அதைச் சிலர் வழங்குவர். பிறரை அன்னியராகக் கருதும் சிந்தையையும் அதுகுறிப்பிக்கும். தன்னை மிதம் மீறிய பெருமையில் உயர்த்தி மற்றவரைத் தாழ்த்தியழைக்கும் வகையிலும் இந்தப் பதம் பிரயோகிக்கப்படும். தனக்கு உட்பட்டவனென்று ஒருவனைக் கேவலப்படுத்தும்போதும் இந்தப் பதம் நடுவே நுழைந்து துணை கூடிக் கொள்ளும். தாழ்வான அல்ப மனமே இப்பதத்தை அடிக்கடி சேர்த்துப் பேசும்.

ஃ

"இவ்விஷயத்தில் "நீரும்" சம்பந்தப்பட்டிருக்கிறீர்" என்னும் போது, அது எவருக்கு எழுதப்பட்டதோ அவரை ஒரு படி தாழ்த்திப் பேசியதாகவும் ஏற்படும். "நீர் தான் சொன்னீராம்" என்று கோப ஆத்திரங்களின் சமயத்தில் இந்த "நீர்" என்ற பதம் அடிக்கடி பிரயோகிக்கப் படவும் கூடும். "நீர்" என்ற பதத்தால் ஒருவரைக் குறிப்பிடும்போது அது ஒரு வியவகாரச் சொல்லாகவும், ஒரு 'வக்கீல் நோட்டீஸ்' போன்றுமாகி விரோதப்பான்மையை மூட்டி விடுகின்றது. "நீங்கள்" என்று இதுகாறும் எழுதப்பட்டு வந்த இடத்திற்கு "நீர்" என்று ஒருவன் வரையப் புகுவானாகில், அத்துடன் அவனுக்கு அங்கிருந்த நட்போ—உறவோ—அறிமுகமோ முறிந்து பாழ்படுவதும் நிச்சயமே. "நீர்" என்ற பதத்தை ஒருவருக்கு எழுதிவிட்டவன் பிறகு அவரது முகத்தை நேரில் காண எவ்வளவோ பின்னடைபவனாகவும் ஆகலாம். அவனது குற்றமுள்ள நெஞ்சே அவனைக் குத்தி வதைக்கும். "நீர்" என்ற பதத்தில் அன்போ, மரியாதையோ எதுவுமில்லை. மரியாதையிலும் அன்பிலும் பல படிகள் தாழ்த்திப் பேசியதாகவே அப்பதத்தின் பொருள் உணர்த்தும்.

பெருந்தன்மையோ, பெரிய புத்தியோ இல்லாத தன்மையால் மரியாதைக்குரிய இடத்தில் சிலர் இந்த "நீர்" என்ற பதத்தை வழங்கி விடுகிறார்கள். அதைப் படிப்பவர்கள் தம்மை "நீங்கள்" என்று குறிப்பிடாமல் "நீர்" என்று குறிப்பிட்டிருப்பதற்கு எவ்வளவோ மனத்தாங்கலடைகிறார்கள். நீர் தான் சொன்னீராம் என்பதற்கும், "நீங்கள் தான் சொன்னீர்களாம்" என்பதற்கும் எவ்வளவோ பேதமுண்டு.

ஃ

"நீங்கள்" என்று சொல்ல வேண்டிய இடத்தில் தாழ்த்திப் பேசி அவமதிக்கும் கருத்துடனேயே "நீர்" என்ற பதத்தைக் குறிப்பிட்டு வரைவாருமுளர். பெரிய ஸ்தானங்களிலுள்ளவர்களும், பெரிய இடங்களிற் பழகி அனுபவப்பட்டவர்களும் எத்தகைய சாமான்னியருக்குக் கடிதங்கள் வரைந்த போதிலும் "நீர்" என்ற கேவலமொழியைக் குறிப்பிடாமல். "நீங்கள்" என்றே எழுதுவார்கள், "ஓய் என்னங்காணும் நீர்" என்னும் போது எவ்வளவோ அலக்ஷிய ஸ்வபாவத்துடன் அந்த சமயத்தில் அப்பதம் பிரயோகிக்கப்படுகின்ற தென்பதைச் சாதாரணமாக அறிந்து கொள்ளலாம்.

ஃ

தமது படிப்பின் திறத்தைக் காண்பித்துக் கொள்வதன் பொருட்டாகவும், தமது உயரிய நிலையைத் தெரிவித்துக் கொள்வதன் பொருட்டாகவும் சிலர் அகம்பாவத்துடன் "நீர்" என்ற பதத்தைக் குறிப்பிட்டு எழுதவோ பேசவோ முற்படுவர். கடன் கேட்கையில் "நீங்கள் எவ்விதமும் பணம் தந்து உதவ வேண்டும்" என்பார்கள். பிறகு, கடன் கொடுத்தவன் தன் பணத்தைத் திருப்பித் தருமாறு தொந்தரை செய்கையிலோ, "நீர் என்வீணாக வந்து அலைகிறீர்? இன்னும் பணம் கைக்கு வரவில்லை" என்பார்கள். "நீர்" என்ற பதத்தை ஒருவன் குறிப்பிடும்போதே அவனது மூடத்தனமான கர்வ ஸ்வபாவமும் அத்துடன் செவ்வனே விளங்கிவிடும்.

ஃ

வக்கீல் கக்ஷிக்காரனைக் கூண்டில் ஏற்றி அந்த சமயம் "நீர்" எந்த இடத்திலிருந்து பார்த்தீர் என்று வினவுகிறார். இது அதிகார தோரணையுடனே கூறியதாகும். "நீர்" என்ற பதம் அதிகார தோரணையில் மட்டுக்கு மிஞ்சி நிற்கிறது. அதைவிட "நீங்கள்" என்று அங்கு உபயோகித்தால் எவ்வளவோ கௌரவமாக இருக்கும். பொதுவாக, "நீர்" என்றசொல்லானது அழகானதுமல்ல; பொருத்தமானதுமல்ல; அன்புடையது மல்ல; "நீர்" என்ற பதமே உபயோகத்திற்கு உகந்ததல்ல. உத்தமமுமல்ல, அதமுமல்ல, மத்திபமான ஒரு தாழ்ந்த சொல்லாகும்.

ஃ

எப்பொழுதும் கௌரவமான பதங்களை வழங்கி, தமது மனத்தையும் உயரிய தன்மைக்குக் கொண்டு செல்வதே உத்தம புமான்களுக்கு அழகாகும். சிறுவர் சிறுமியர்க்குங் கூட "நீ—நீர்" என்று ஒருமையிற் பேசும்படி கற்பியாமல், எவரையும் "வாருங்கள்—போங்கள்—நீங்கள்"—என்று பன்மையிற் கூறும் வாறுகப் பயிற்றுவித்தல் வேண்டும். பிறரை நிந்திப்பதுகூட மரியாதையான கௌரவச் சொற்களில் இருப்பது அவசியம். இவ்விவர முணர்ந்தோர் எந்த சந்தர்ப்பத்திலும் "நீர்" என்ற பதத்தை வழங்காமலிருக்க சிரத்தை கொள்வது நன்றாம். பெருமையும் சிறுமையும் தான் தர வருமே என்பதை யுணர்க.

# " அமிர்த குணபோதினி "

## பிரஜோத்பத்தி வருஷத்திய ஆவணி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| ஸி-ம | 17 | 1 | தி | சது 17-15, ஹஸ்36-15, கருடபஞ்சமி, கொல்லமாண்டு. |
| ஸி | 18 | 2 | செ | பஞ் 10-22, சித் 31-38, கரிநாள் [ஷஷ்டீ விரதம். |
| ஸி | 19 (ஆகஸ்ட் 8-ம்) | 3 | பு | ஷஷ் 4-30, உப 55-18, ஸ்வா 28-6, சூரிய ஷஷ்டி, |
| ஸி | 20 | 4 | வி | அஷ் 56-22, விசா 25-52. |
| ஸி-ம | 21 | 5 | வெ | நவ 54-15, அநு 24-56, வாலக்ஷ்மி விரதம். [கருடன். |
| ஸி | 22 | 6 | ச | தச 53-21, கேட் 25-13, ததீவிரதம், காளஹஸ்தி |
| அ-ஸி | 23 | 7 | ஞா | ஏகா 53-45, மூல 26-47, ஸர்வைகாதசி, ஆவணி மூலம், [மதுரை பிட்டுத் திருநாள். |
| ஸி-ம | 24 | 8 | தி | துவா 55-22, பூரா 29-33, துவாதசி, கன்யாயனம்6-41 |
| பி-ஸி | 25 | 9 | செ | திர 58-8, உரா 33-28, பிரதோஷம், கரிநாள். |
| ஸி-பி | 26 | 10 | பு | சசி 60-0, ஶ்ரூவ 38-27, ருக்உபாகர்மம், ஶ்ரவணம், |
| ஸி-ம | 27 | 11 | வி | சசி 1-56, அவி 41-23, யாஜுஷவார்ஷிகோபாகர்மம், |
| ஸி | 28 | 12 | வெ | ○ 6-43, சத 51-10. |
| ம-ஸி | 29 | 13 | ச | பிர 12-18, பூட் 57-34, அசூன்ய சயன விரதம். |
| அ | 30 | 14 | ஞா | துவி 18-30, உட் 60-0. [ஶ்ராவண பகுளம். |
| ஸி | 31 | 15 | தி | திரி 25-1, உட் 6-21, கஜ்ஜலி திரிதியை. |
| ஸி | 1 | 16 | செ | சது 31-31, ரே 14-12, அங்காரக சதுர்த்தி. |
| ம-ஸி | 2 | 17 | பு | பஞ் 37-27, அசு 26-47. |
| ஸி-ம | 3 (செப்டம்பர்) | 18 | வி | ஷஷ் 42-21, பர28-22 |
| ஸி-ம | 4 | 19 | வெ | ஸப் 45-49, கிரு 33-40, ஶீதலா--கிருத்திகா--விரதம். |
| அ-ஸி | 5 | 20 | ச | அஷ்47-29, ரோ37-15, ஸ்ரீஜயந்தி, கோகுலாஷ்டமி. |
| ஸி | 6 | 21 | ஞா | நவ 47-9, மிரு 38-54. |
| ஸி-அ | 7 | 22 | தி | தச 44-49, ஆரு 38-35. |
| ஸி | 8 | 23 | செ | ஏகா 40-34, புந 36-20, ஸர்வைகாதசி. |
| ஸி | 9 | 24 | பு | துவா 34-38, பூச 32-24. |
| ஸி-அ | 10 | 25 | வி | திர 27-15, ஆயி 27-1, பிரதோஷம், சிவராத்திரி. |
| ம-ஸி | 11 | 26 | வெ | சசி 18-47, மக 20-30, திதிதுவயம். |
| ஸி-உ | 12 | 27 | ச | ● 9-44, பூர 13-28. |
| அ-ஸி | 13 | 28 | ஞா | பிர 0-32, உப 51-0, உத் 6-17, உப 53-5, பாத்ரபதசுத்தம், ஸாமோபாகர்மம், கரிநாள், சந்திர தரிசனம். |
| பி-அ | 14 | 29 | தி | திரி 43-5, சித் 53-2, ஹரிதாலிகா. |
| ஸி-ம | 15 | 30 | செ | சது 35-29, ஸ்வா 47-43, விநாயக சதுர்த்தி. |
| ஸி-அ | 16 | 31 | பு | பஞ் 29-7, விசா 43-39, கன்யாரவி 32-53, ருஷி பஞ்சமி. |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| | 15உக்கு ராசி. | | குரு |
| | | | ர சு பு |
| சனி | | | கேகுஜ |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை.